Authorised by the Director of Public Instruction, Madras,
... use in Schools under Public Management also (Gazette 28-6-1921.)

# NEW

# TAMIL READER

## IV

BY

C. R. NAMASIVAYA MUDALIAR,
*Lecturer in Tamil, Queen Mary's College, Madras*



APPROVED BY THE TEXT-BOOK COMMITTEE
*(Vide Gazette, Part I-B, 26th May 1914, Page 361)*

MADRAS:
C. COOMARASAWMY NAIDU & SONS
1927



[Price 6 As.

நூதன

# நான்காம் வாசக புஸ்தகம்

மேரி யரசியார் கலாசாலைத் தமிழ்ப் பண்டிதரும்
'நல்லாசிரியன்' பத்திராதிபரும் ஆகிய
கா. நமச்சிவாய முதலியார்
எழுதியது

துரைத்தனத்தார் அங்கீகரித்தது

சென்னை:
ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்
1927

 [விலை 6 அணா



# NATIONAL ANTHEM

God save our gracious King
Long live our noble King
God save the King.

Send him victorious
Happy and glorious
Long to reign over us
God save the King.



காத்தருள் தேவ எம்
காருண்ய ராஜனைக்
காத்தருள்க.

ஆயுரா ரோக்கியமும்
ஆட்சியும் வெற்றியும்
ஆண்மை நற்கீர்த்தியும்
அருள் செய்க.

# பொருளடக்கம்



## வாசக பாடங்கள்



## செய்யுட் பாடங்கள்

நூதன

# நான்காம் வாசக புஸ்தகம்

## 1. பூனையின் இனம் - I

கண்ணப்பன் என்னும் சிறுவன் மூன்றாம் வகுப்பில் தேறி, நான்காம் வகுப்புக்கு மாறினான். உடனே அவனுக்கு வெய்யிற் கால விடுமுறை கிடைத்தது. அவனது தகப்பனார் அவனைச் சென்னைக்கு அழைத்துக்கொண்டு போய் அங்கே உள்ள சிறந்த காட்சிகளை அவனுக்குக் காட்டலானார். ஒருநாள் அவர் கண்ணப்பனுக்குக் காட்டு மிருகங்களைக் காட்ட எண்ணிப் பீபில்ஸ் பார்க் என்னும் சிங்காரத் தோட்டத்திற்கு அவனைக் கூட்டிக்கொண்டு போனார். அங்கே அவர்கள் இருவரும் தலைக்கு ஓர் அணா கட்டணம் செலுத்திவிட்டு மிருகாசயத்துக்குள் சென்றார்கள்.

‘கண்ணப்பா, இங்கே இருக்கிற ஜந்துக்களை எல்லாம் கவனித்துப் பார். சில மிருகங்களை இரும்புக் கிராதி அமைத்த கூட்டில் அடைத்து வைத்திருக்கிறார்கள்; சில மிருகங்களை வெளியிடங்களில் யதேச்சையாகத் திரியும்படி விட்டிருக்கிறார்கள்.

'கண்ணப்பா, இங்கே வா, இந்தக் கூட்டில் இருக்கும் மிருகங்களைப் பார்; இந்த மிருகங்களை நீ இதற்கு முன் எங்கேயாவது பார்த்திருக்கிறாயா?' என்று கேட்டார் தகப்பனார்.



'அப்பா, நான் இதை உயிரோடு பார்த்ததில்லை; இதன் உருவத்தைப் படத்தில் பார்த்திருக்கிறேன். எங்கள் உபாத்தியாயர் சிங்கத்தைப் பற்றி ஒரு நாள் ஒரு கதை சொன்னார்; அப்போது இதன் படத்தைக் காட்டி யிருக்கிறார்' என்றான் கண்ணப்பன்.

'ஆமாம், இது சிங்கந்தான்: இங்கே இரண்டு சிங்கங்கள் இருக்கின்றன. இரண்டும் ஒரே மாதிரியாய் இருக்கின்றனவா? பார்' என்று கேட்டார் தகப்பனார்.

'அப்பா, இவற்றில் ஒன்று நின்றுகொண்டு இருக்கிறது; மற்றொன்று படுத்துக்கொண்டு இருக்கிறது. நின்றுகொண் டிருப்பது படுத்துக்கொண் டிருப்பதைவிடக் கொஞ்சம் பெரியது. நின்றிருக்கும் சிங்கத்திற்குக் கழுத்தைச் சுற்றிலும் மயிர் அடர்ந்து முழங்கால் வரையில் நீண்டு தொங்குகிறது. படுத்திருக்கும் சிங்கத்திற்கு அதைக் காணோம்' என்றான் கண்ணப்பன்.

'கண்ணப்பா, நீ புத்திசாலி, நன்றாய்க் கவனித்து விடை கூறுகிறாய். இவைகளில் நின்றுகொண் டிருப்பது ஆண் சிங்கம்: படுத்திருப்பது பெண் சிங்கம். சிங்கத்தில் இது ஆண் என்றும், இது பெண் என்றும் எப்படித் தெரிந்துகொள்வது? சொல், பார்க்கலாம்' என்றார் தகப்பனார்.

'ஓ, எனக்குத் தெரியும். கழுத்தண்டை மயிர் இருப்பது ஆண் சிங்கம், அது இல்லாதது பெண் சிங்கம்' என்றான் கண்ணப்பன்.

'சரிதான், கழுத்து மயிர் என்று சொல்கிறாயே, அதற்குப் "பிடரி மயிர்" என்று பெயர். சிங்கம் குட்டியாய் இருக்கும்போது அதற்குப் பிடரி மயிர் இராது. சிறு பிள்ளைகளுக்கு மீசை மயிர் இருக்கிறதா—இல்லையே, அப்படித்தான் இதுவும்' என்றார் தகப்பனார்.

'ஆமாம், சரிதான், சரிதான்' என்று சொல்லி நகைத்தான் கண்ணப்பன்.

இருவரும் இப்படிப் பேசிக்கொண்டு இருக்கையில், ஒருவன் ஆட்டுத்தொடைகள் இரண்டு கொண்டு வந்து

அந்தக் கூட்டுக்குள் போட்டான். சிங்கங்கள் பாய்ந்து ஓடி, ஒவ்வொன்றும் ஒவ்வொரு தொடையைப் பற்றிக்கொண்டு தின்ன ஆரம்பித்தது. அப்போது தகப்பனர் பிள்ளையைப் பார்த்து,

'கண்ணப்பா, சிங்கம் இரை தின்பதைப் பார்; இது எதைப்போல் தின்கிறது? சொல், பார்க்கலாம்' என்று கேட்டார்.

'ஆம், அப்பா; சிங்கம் பூனையைப் போலவே இரையைத் தின்கிறது. உள்ளே சுருங்கி யிருந்த நகங்களை நீட்டி, மாமிசத்தை நன்ருய்ப்பற்றிக்கொண்டு கிழிக்கிறது. இதன் பற்களும் பூனையின் பற்களைப் போலவே இருக்கின்றன. சிங்கம் எலும்பிலுள்ள ஊனை நாக்கினல் நக்கி எடுத்துவிடுகிறது. இதையும் பூனை என்று சொன்னல் என்ன?' என்று கேட்டான் கண்ணப்பன்.

'சிங்கத்தைப் பூனை யென்று எப்படிச் சொல்லலாம்! இது பூனை இனத்தைச் சேர்ந்தது; அதனல் பூனையைப் போலவே காண்கிறது. பூனை இனத்தைச் சேர்ந்த மிருகங்கள் இன்னும் சில உண்டு. அவற்றை யெல்லாம் பிறகு உனக்குக் காட்டுகிறேன். முன்பு இந்தச் சிங்கத்தின் உறுப்புக்களையும், செய்கைகளையும் நன்ருய்க் கவனித்துத் தெரிந்துகொள்.

'சிங்கத்தைப் பார்த்தால் மிகவும் பெரியதோர் பூனை போலவே இருக்கிறது. சிங்கம் ஒரு விதமான மங்கின மஞ்சள் நிறமுள்ளது. சிங்கம் சாதாரணமாக அது வசிக்கும் காட்டிலுள்ள மணலின் நிறம்போல் இருக்கும். கண்களிலுள்ள கரு விழிகளும், பூனைக்கு இருப்பது போலவே, பகலில் ஒடுங்கியும் இரவில்

அகன்றும் இருக்கும். கண்கள் இரவில் அக்கினி கோளங்கள்போல் ஜொலிக்கும். சிங்கம் இரவில் தான் நன்றாய்ப் பார்க்கவல்லது. பூனை இரவில் தன் இரைகளைத் தேடுவதுபோலவே, அதன் இனத்தைச் சேர்ந்த மிருகங்களும் இரவில்தான் இரை தேடுகின்றன. சிங்கம் அதிக பலமுள்ளது. ஒரு சிறு மாட்டைத் தன் வாயினுற் கௌவி, தூக்கிக்கொண்டு, சுமார் 20 அடி அகலமுள்ள வாய்க்காலையும் தட்டாமல் தாண்டி ஓடவல்லது.

'சிங்கம், தான் வேட்டையாடிக் கொன்ற இரையையே தின்னும். அது அநாவசியமாகப் பிராணிகளைக் கொல்வதில்லை. சிங்கம் இரவில் கர்ஜிக்கும். அது, சிங்கம் பசியாறிச் சந்தோஷமா யிருப்பதற்கு அறிகுறி யாகும். அதன் கர்ஜனை சுமார் 3-மைல் தூரம் கேட்குமாம். சிங்கம் பூனையின் தன்மைகளை யெல்லாம் அடைந்திருந்தாலும், பூனையைப் போல் மரமேறும் திறமை சிங்கத்துக்குக் கிடையாது.

'வட இந்தியாவில் சிந்து, கூர்ஜரம் முதலிய தேசங்களிலும், ஆப்பிரிக்காவின் அகன்ற வனங்களிலும், பெர்ஷியாவை யடுத்த பெரிய காடுகளிலும் சிங்கங்கள் உண்டு' என்று கூறினர் தகப்பனர்.



## 2. பூனையின் இனம் - II.

### புலி

'குழந்தாய், இந்தக் கூட்டில் இருப்பதைப் பார்; இதுவும் பூனை இனத்தைச் சார்ந்ததே. இதற்கும் சிங்கத்திற்கும் என்ன பேதம்? சொல் பார்ப்போம்' என்றார் தகப்பனர்.

'அப்பா, சிங்கத்திற்கும் இதற்கும் அதிக பேதம் காண்கிறது. சிங்கத்திற்கு இருப்பதுபோல் இதற்குப் பிடரிமயிரும் வாலில் குஞ்சமும் இல்லை. சிங்கத்திற்கு இல்லாத கரிய கோடுகள் புலியின் உடலில் அமைந்திருக்கின்றன. புலியைப்பற்றி நான் முன்னும் குறிப்-



பும் வாசித்திருக்கிறேன். அது செடிகளின் நடுவில் படுத்திருந்தால், பிறருக்குத் தெரியாமலிருக்கும்படி இந்தக் கோடுகள் அமைந்திருக்கின்றனவாம். புலி நீர்நிலைகளுக்கு அருகில் ஒளிந்திருந்து, அங்கே தண்ணீர் குடிக்கவரும் மாடு, மான் முதலிய மிருகங்களைப் பிடித்துக் கொன்று தின்னுமாம். அப்பா, இன்னொரு

சக்தியும் எனக்குத் தெரியும்; சிங்கம் பசி எடுத்தால்தான் பிராணிகளைக் கொல்லுமாம்; புலியோ, தன் கண்ணில் கண்டதை யெல்லாம் கொன்று, இரத்தப் பெருக்கைப் பார்த்துக் களிப்படையுமாம். புலி இரத்தப் பிரியமுள்ள ஜந்து. புலி, தான் கொன்ற ஜந்துவைக் கௌவிக்கொண்டு போய், தன் குகையில் வைத்துக்கொண்டு,[1] பசித்த காலத்தில் அதைத் தின்னுமாம்' என்றான் கண்ணப்பன்.

'ஆமாம், புலியைப்பற்றி உனக்கு நன்றாய்த் தெரிந்திருக்கிறது; நானும் கொஞ்சம் சொல்லுகிறேன் கேள்: சில புலிகள் மனிதரையும் கொன்று தின்னப் பிரியப்படும். ஏன் தெரியுமா? பெரும்பாலும் கிழப்புலிகளே மனிதரைக் கொல்லப் பிரியப்படும். புலிக்குக் கிழத்தனம் வந்துவிட்டால், மிருகங்களைத் தாக்கிக்கொண்டுபோய்க் கொல்ல அதனால் ஆவதில்லை. ஆதலால், அது காடுகளுக்கு அருகிலுள்ள கிராமங்களில் புகுந்து, மனிதரைக் கொல்லத் தலைப்படும். ஒரு முறை ருசி கண்டுவிட்டால், பிறகு அது மனிதரைத் தேடிக் கொன்று தின்னவே மனங்கொண்டு திரியும்.

'சிங்கத்தைப் போலவே புலிக்கும் மரம் ஏறத் தெரியாது. "பூனை, புலிக்கு எல்லாம் கற்றுக்கொடுத்தது. மரம் ஏற மட்டும் கற்றுக்கொடுக்கவில்லை" என்று மனிதர் சொல்வது வழக்கம்.

## சிறுத்தை

'சிறுத்தையும் பூனை இனத்தைச் சேர்ந்ததே; இதற்குப் புள்ளிப் பூனை யென்றும் பெயர். சிறுத்தையில் இரண்டுவகை யுண்டு. ஒன்று மஞ்சள் நிறத்தில் கருப்புள்ளி கலந்த தோலை யுடையது; மற்றொன்று

உடல் முழுதும் கருமையான தோலிலே கொண்டிருப்பது. உற்றுக் கவனி, இதன் உடலின் கருமையிலும் கருமையான புள்ளிகள் காணப்படுவதைப் பார். சிறுத்தை அதிக கொடூரமான குணமுள்ளது. இது காட்டிலுள்ள சிறிய விலங்குகளை வேட்டையாடித் தின்னும். சில சமயங்களில் ஊர்களில் புகுந்து கோழி,



வாத்து முதலிய ஜந்துக்களைப் பிடித்துத் தின்னும். இது சமயம் பார்த்துக் குழந்தைகளையும் கௌவிக்கொண்டு ஓடிப்போய்விடும்.

## வேட்டைச் சிவிங்கி

'இது வேட்டை யாடுவதில் மிகவும் திறமையுடையது. ஆதலால் இதற்கு, "வேட்டைச் சிவிங்கி" என்ற பெயர். இதைச் சீட்டா என்றும் சொல்வதுண்டு. இது பார்வைக்குச் சிறுத்தைகளைப் போலவே இருக்கும். ஆனால், இதற்கு, உள்ள தாடையின் சிறுத்தைக்குக் கிடையாது. இதையன்றி இன்னொரு வித்தியாசமும் உண்டு. சிங்கம், புலி, சிறுத்தை ஆகிய மூன்று மிருகங்களும், பூனையைப்போல், தம் நகங்களை

வேண்டியபோது, வெளியே நீட்டவும் வேண்டாத போது அவற்றை உள்ளே இழுத்துக் கொள்ளவும் கூடும். வேட்டைச் சிவிங்கி அப்படிச் செய்யமுடியாது. சிவிங்கிக்குக் கால்கள் நீண்டிருப்பதனால் அது வெகு வேகமாக ஓடவல்லது. அதனால், வேட்டையில் விருப்-



பமுள்ள வேந்தர்கள் சிவிங்கிகளைப் பிடித்துப் பழக்கி, வேட்டை நாய்களுக்குப் பதிலாக அவற்றை உபயோ-கிக்கிறார்கள்.



## 3. பூனையின் இனம் - III

### கழுதைப் புலி

இது உருவத்திலும் நிறத்திலும் கழுதையை ஒத்திருப்-பதனாலும், புலியைப்போல் உடலில் கரிய கோடுகளைக் கொண்டிருப்பதனாலும் இதற்குக் கழுதைப் புலி என்-பது பெயராயிற்று. இதற்கு முன்கால்களைவிடப் பின்கால்கள் குறுகியவை. இது நடப்பதைப் பார்த்-தால் கால் முடமான கூனன் ஒருவன் நடப்பதுபோல் இருக்கும். இது நேரே நடவாமல் சுழன்று சுழன்று நடந்து போகும். கழுதைப் புலி நேரே ஓடி இரை-

யைப் பிடித்துத் தின்ன முடியாது. ஆகையால், அது சிங்கம், புலி முதலிய ராஜ மிருகங்களின் பின்னே சென்று, அவை தின்று மிகுந்தவற்றைத் தான் தின்று திருப்தியடையும். இதன் கடவாய்ப் பற்கள் மிகவும் உறுதியானவை. அந்தப் பற்களால் எலும்புகளை வெகு சுலபமாக நொறுக்கித் தின்றுவிடும். அது கூச்சலிடுவ-



தைக் கேட்டால் மனிதர் பெருங் கூச்சலிட்டுச் சிரிப்-பதுபோல் இருக்கும். காட்டில் பிரயாணம் செய்யும் மனிதர்கள் இதன் தொனியைக் கேட்டு மயங்கி, மனி-தர்கள்தாம் சிரிக்கிறார்கள் என்று எண்ணி, இதன் அருகிற் போவார்களாம்; அப்போது கழுதைப்புலி அவர்களைப் பற்றிக் கொன்று தின்றுவிடுமாம். இதுவும் ஒரு தந்திரந்தானே!

## கீரிப்பிள்ளை

கீரிப்பிள்ளையும் பூனை இனத்திற் சேர்ந்ததே. இதற்கு உடல் நீண்டு, கால்கள் குறுகி இருக்கின்றன. உரோமம் தடித்து, மெல்லிய ஊசிபோல் இருக்கிறது. பற்களைப் பார், அவை பூனையின் பற்களைப் போலவே

அமைந்திருக்கின்றன. கீரிப்பிள்ளை தோட்டங்களிலும் புதல்களிலும் வசித்துக்கொண்டு, அங்கேயுள்ள எலி முதலியவற்றைப் பிடித்துத் தின்னும். வீட்டில் வளரும் கீரிப்பிள்ளை சாதம், பழம், அப்பம் முதலியவற்றைத் தின்னும். கீரிப்பிள்ளை பாம்பைக் கண்டால் அதைக் கடித்துக் கொன்று விடும். விஷப் பாம்பு கடித்தாலும் கீரிக்கு அபாயமில்லை என்று பலர் எண்ணுவதுண்டு; அது சரியன்று. பாம்பு கடித்தால் கீரி இறந்துவிடுவது நிச்சயம். கீரி பாம்போடு சண்டை செய்யும்போது பாம்பு தன்னைக் கடிக்கும்படி அது இடந் தருவதில்லை. கீரி தந்திரமாக எகிறிக் குதிக்க வல்லது. ஆகையால், பாம்பு தன்னோடு சண்டை செய்து சோர்வடையும் சமயம் பார்த்து, கீரி அதைக் கழுத்தண்டை கடித்துக் கொன்றுவிடும். ஒரு சமயம் கீரியைப் பாம்பு கடிக்க முயன்றாலும், கீரியின் உடலிலுள்ள ஊசிபோன்ற உரோமத்திலும் தடித்த தோலிலும் பாம்பின் பற்கள் பதிவதில்லை. இதை உணராமல், கீரி பாம்பைக் கடித்துவிட்டு, அதன் விஷம் தன் உடலில் பாயாதபடி ஓடிச்சென்று ஒருவகைச் செடியைத் தின்கிறது என்று பலர் சொல்லுகிறார்கள்.



மர நாய்

'மரநாய் என்று பெயர் சொல்லி, அது பூனை இனத்தில் சேர்ந்தது என்று சொன்னால் அதை நம்பலாமா! உருவத்தில் இது நாயை ஒத்திருந்தாலும், பூனையைப்போல் இது மரம் ஏறும் திறமையும் உடை-

யதா யிருப்பதனுல் இதை மரநாய் என்று சொல்லு-கிறோம். நாய் இனத்திற்கு மரம் ஏறத் தெரியாது. ஆகையால், இது பூனை இனத்திற் சேர்ந்ததேயாகும். மரநாயின் வாலைப் பார்; அது தன் வாலைப் பந்து போல் சுற்றி வைத்திருக்கிறது. இது பகலில் மரப் பொந்துகளில் பதுங்கி யிருந்து, இரவானதும் இரை தேடப் புறப்பட்டு, எலி, அணில், சிறு பறவை முதலியவற்றைப் பிடித்துத் தின்னும். ஒன்றும் அகப்-படாவிட்டால் கிராமங்களுக் கருகில் வந்து, தென்னை, பனை முதலிய மரங்களில் ஏறி, அவற்றில் கட்டியிருக்-கும் கள்ளுக் குடுவையிலுள்ள கள்ளைக் குடிக்கும். சில சமயங்களில், இது மயக்கம் தலைக்கேறி கீழே விழுந்து கிடக்கும். இது வீடுகளில் புகுந்து உணவுப் பொருள்-களைத் திருடித் தின்பதும் உண்டு.



## புனுகுப் பூனை

'இதுதான் புனுகுப் பூனை; புனுகு என்பது ஒரு வகை வாசனைத் திரவியம் என்பது உனக்குத் தெரி-யுமே. அந்தப் புனுகு இந்தப் பூனையினிடமே உண்-டாகின்றது. இது சாதாரண பூனையைக் காட்டிலும்

உருவில் சிறுத்து இருக்கிறது. இந்தப் பூனை இருக்கும் கூட்டைப் பார். நடுவில் ஒரு மூங்கில் கழி சுழலும்படி நாட்டப்பட்டு இருக்கிறது. பூனை தன் உடலின் பின்பாகத்தை அடிக்கடி இந்தக் கழியில் தேய்த்துக்கொள்ளும்; ஏன் தெரியுமா? இந்தப் பூனைக்கு வாலின் கீழ் இரண்டு தைலப் பைகள் இருக்கின்றன. அதில் அடிக்கடி தைலம் ஊறும்; பூனை அந்தத் தைலத்தை இந்தக் கழியில் தேய்த்துவிடுகிறது. அந்தத் தைலந்தான் புனுகு. மனிதர் அதை வழித்து எடுத்து ஒரு பாத்திரத்தில் சேமித்து வைப்பார்கள். புனுகுப் பூனையும் காட்டு மிருகந்தான். மனிதர் அதைப் பிடித்து வந்து வளர்த்துப் பழக்கி, அது தரும் புனுகைச் சேகரிக்கிறார்கள்.



## காட்டுப் பூனை

'வீட்டுப் பூனையைப் போல் காட்டுப் பூனை என்பதும் ஒன்று உண்டு. அது வீட்டுப் பூனையைவிட மிகவும் பெரியது. அது காட்டிலேயே வசித்துக் கொண்டு, சிறு பறவைகளையும் மிருகங்களையும் பிடித்துத் தின்னும். சில சமயங்களில் நாட்டில் புகுந்து, கோழி, வாத்து முதலியவற்றையும் பிடித்துத் தின்னும். அதைப் பார்த்தால் நமக்கும் பயங்கரமாக இருக்கும்' என்று சொன்னார் தகப்பனார். கண்ணப்பன் இதையெல்லாம் கேட்டு மிகவும் களிப்படைந்தான். பிறகு இருவரும் வீட்டுக்கு வந்தார்கள்.



## 4. தண்ணீரின் மூன்று தன்மைகள்.

நமது உடலைக் கவனித்தால் அதில் மூன்று விதமான பொருள் கலந்திருப்பதைக் காணலாம். தசை, நரம்பு, எலும்பு முதலானவை கடினமான பொருள்கள்; உடம்புக்குள் எங்கும் ஓடிப் பாய்ந்திருக்கும் இரத்தம் ஜலரூபமானது. உடலிலுள்ள எல்லா உறுப்புக்களையும் இயக்குவதற்கு உள்ளே செல்வதும் வெளியே வருவதுமாயிருப்பது வாயு.

மேலே கூறிய விஷயத்தைக் கவனித்தால் நமது தேகத்தில் சில பொருள்கள் கனபதார்த்தமாகவும், சில பொருள்கள் ஜலபதார்த்தமாகவும், வாயு பதார்த்தமாகவும் இருக்கின்றன. இதைப்போலவே உலகத்திலுள்ள பொருள்களைக் கவனித்தால், சில கனமான பதார்த்தமாகவும், சில ஜலமான பதார்த்தமாகவும், சில வாயு பதார்த்தமாகவும் காண்கின்றன. இவைகள் தவிர, உலகில் வேறு விதமான பதார்த்தம் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகையால் உலகத்திலுள்ள பொருள்களில், மண், கல், மரம் முதலியவற்றைப் போன்ற பொருள்களைக் கன பதார்த்தம் என்றும், தண்ணீர், எண்ணெய், பால் முதலியவற்றைப் போன்ற பொருள்களை ஜல பதார்த்தம் அல்லது திரவ பதார்த்தம் என்றும், காற்று, ஆவி முதலியவற்றைப் போன்ற பொருள்களை வாயு பதார்த்தம் என்றும், சாஸ்திரிகள் வகைப்படுத்திக் கூறுகிறார்கள்.

இப்போது தண்ணீரைப்பற்றிக் கவனிப்போம். தண்ணீர் திரவ பதார்த்தம். தண்ணீரை ஒரு பலகை-

மேல் ஊற்றினால், அது ஓரிடத்தில் நிலைத்து நிற்காமல் பல பக்கங்களிலும் பாவி, வழிந்து ஓடுகிறது. அதை ஒரு பாத்திரத்தில் ஊற்றினால் அந்தப் பாத்திரத்தின் உருவத்தை யடைகிறது. திரவ பதார்த்தத்திற்குத் தனக்கென்று ஓர் உருவம் இல்லை. கன பதார்த்தத்திற்கு உருவம் உண்டு. கன பதார்த்தத்தை உடைத்தால் அது தூள் தூளாக மாறுகிறது; திரவ பதார்த்தம்



[இங்கே மூன்று பாத்திரங்களில் தண்ணீர் இருக்கின்றது. டம்ளரில் உள்ள தண்ணீர் டம்ளரின் உருவத்தையும், புட்டியிலுள்ள தண்ணீர் புட்டியின் உருவத்தையும், தட்டிலுள்ள தண்ணீர் தட்டின் உருவத்தையும் அடைந்து, இருக்கின்றன. ஆதலால், தண்ணீருக்குத் தனக்கென்று ஏதும் உருவமில்லை என்று ஏற்படுகின்றது.]

துளித்துளியாக விழுகிறது. வாயு பதார்த்தமும் அது அடையும் பாத்திரத்தில் பாவி, அப் பாத்திரத்தின் உருவை யடைகிறது. தண்ணீர் திரவ பதார்த்தமாக இருந்தாலும், அதைக் கன பதார்த்தமாகவும், வாயு பதார்த்தமாகவும் மாற்றிவிடலாம்.

வாக்கியங்களை ஜப்பானியர் நியதியாகக்கொண்டு நடக்கிறார்கள். ஜப்பானியச் சிறுவர்கள், தம் தாய் தந்தையரிடத்தில் வைத்துள்ள அன்பைக் காட்டச் சில சிறு கதைகள் சொல்லுகிறேன் கேள்:

ஜப்பான் தேசத்தில் ஒரு பையனுக்கு மாற்றாந்தாய் ஒருத்தி இருந்தாள்; அவள் அந்தப் பையனைச் சரியாய்ப் போஷித்துப் பாதுகாப்பதில்லை. அவள் என்ன கொடுமை செய்தாலும், அச்சிறுவன் அதைப் பொறுமையோடு சகித்துக்கொள்வான். ஒருநாள் அவள் அந்தப் பையனைக் கூப்பிட்டு, 'பையா, எதிரில் இருக்கும் குளம் குளிர்ச்சியால் உறைந்து கிடக்கிறது; நீ போய் அதன்மேல் படுத்துக்கொள்' என்று கூறினாள். பையன் போர்வையும் இல்லாமல் அந்தப் பனியின்மேல் படுத்துக்கொண்டான். உடலின் உஷ்ணத்தினால் அப்பனிக் கட்டி கொஞ்சம் உருக ஆரம்பித்தவுடனே, உள்ளே இருந்த இரண்டு நண்டுகள் மேலே வந்தன. சிறுவன் அவற்றைப் பிடித்துக்கொண்டு ஓடி வந்து, 'அம்மா, நண்டின்மேல் உனக்கு அதிக இஷ்டமல்லவா? அதனால் இவற்றைப் பிடித்துக்கொண்டு வந்தேன்' என்று சொல்லி, அவற்றை அவளிடம் கொடுத்து, அவை தனக்குக் கிடைத்த விதத்தையும் வெளியிட்டான். மாற்றாந்தாய் அவற்றை வாங்கிக்கொண்டு மகிழ்ச்சியடைந்து, அன்றுமுதல் அவன்மேல் அதிக அன்பு பாராட்டத் தலைப்பட்டாள்.

ஜப்பான் தேசத்தில் சிறுவன் ஒருவன் தன் தாய் தந்தையருடன் ஓர் அறையில் படுத்துக்கொண்டு இருந்தான். அந்த அறையில் கொசுக்கள் அதிகமாக இருந்தன. கொசுக்களின் உபத்திரவத்தால் தாய்

தந்தைதாயர் தூங்கவில்லை என்பதை அந்தப் பையன் தெரிந்துகொண்டான். உடனே அந்தப் புத்திசிகாமணி தன் உடைகளை எல்லாம் அவிழ்த்து அப்புறம் எறிந்து-விட்டுக் குப்புறப் படுத்துக்கொண்டான். கொசுக்கள் கூட்டமாக மொய்த்துக்கொண்டு அச் சிறுவனைக் கடிக்க ஆரம்பித்தன. அதனால், தாய் தந்தையர் கொசுக்களின் உபத்திரவம் நீங்கி நன்றாய்த் தூங்கினார்கள். பொழுது விடிந்ததும் பெற்றோர் பிள்ளையைப் பார்த்தார்கள். அவன் உடல் முழுதும் கொசுக்கடியினால் இரத்தம் குழம்பியிருந்தது. பிறகு, அதன் காரணத்தைச் சொல்-லக்கேட்ட பெற்றோர் பெரிதும் துக்கப்பட்டார்கள். பிள்ளாய், இந்தச் சிறுவன் தன் தாய் தந்தையரிடத்தில் வைத்திருந்த அன்பை என்னவென்று கூறலாம்!

குழந்தாய், இன்னொரு கதை சொல்லுகிறேன் கேள்: அது மிகவும் அற்புதமாயிருக்கும். ஜப்பானில் ஒரு ஸ்திரீக்கு மூன்று புதல்வர் இருந்தனர். அவ-ளுடைய புருஷன் இறந்துவிட்டபடியால், அவள் அந்-தப் பிள்ளைகளை கூலிவேலை செய்து, கொண்டு வரும் பணத்தைக் கொண்டு, ஜீவனஞ் செய்து வந்தாள். அந்த மூவரும் மிகவும் சிறியவர்களானபடியால், அவர்கள் சம்பாதிக்கும் பணம் குடும்பச் செலவுக்குப் பற்றாமல் இருந்தது. அதனால், கிடைத்ததைப் பிள்ளைகளுக்கு இட்டு, ஒவ்வொரு வேளை தாயார் பட்டினி கிடக்கத் தலைப்பட்டாள். தாயார் பட்டினி கிடப்பதைப் பார்க்க மைந்தர்கள் மனம் சகிப்பதில்லை. அதனால், அந்த மூவ-ரும் என்ன செய்வதென்று சிந்தித்துக்கொண்டு இருந்-தார்கள். அப்போது அவர்களில் கடைசியானவன் மற்றவர்களைப் பார்த்து ஓர் உபாயம் சொன்னான்.

'அண்ணா, நான் ஒரு காரியம் சொல்லுகிறேன். அப்படிச் செய்தால் நல்லது' என்றான். 'அதென்ன!' என்று மற்ற இருவரும் அவனைக் கேட்டார்கள்.



சிறுவன்—'நமது ஊரில் திருடர் தொந்தரவு அதிகமாயிருக்கின்றது; திருட்டுப் பிள்ளைகளைப் பிடிப்பவர்களுக்குத் திரண்டபொருள் கொடுப்பதாக நமது ராஜா தெரிவித்திருக்கிறார். அதனால் என்னைத் திருட்டுப் பையன் என்று பிடித்துக் கட்டிக்கொண்டு போய் அரசன்முன் விட்டால் அவர் அதிக பணம் கொடுப்பார்; அதைக்கொண்டு நீங்கள் நமது தாயாரை நன்றாய்க் காப்பாற்றலாம்' என்றான்.

மூத்தவன் — 'இது நல்ல உபாயந்தான்; ஆனால் நீ சிறியவன், உன்னைத் திருடனாக்குவது சரியன்று. நீங்கள் இருவரும் என்னைப் பிடித்துக் கட்டிக்கொண்டு போங்கள்' என்றான்.

இரண்டாம் பையன் — 'நீங்கள் இருவரும் வீட்டில் இருங்கள். என்னைக் கொண்டுபோய், திருடன் என்று நிறுத்துங்கள்' என்று கூறினான்.

சிறுவன் — 'நீங்கள் சிறையில் இருப்பது சரி அன்று: நானோ மிகவும் சிறியவன், என்றால் இப்போது வேலை செய்யமுடியாது. நான் கொஞ்சகாலம் சிறையில் இருந்தால் அதற்குள் பெரியவன் ஆவேன். பிறகு நான் விடுதலை அடைவேன். அடைந்ததும் நானும் உங்களோடு சேர்ந்து உழைத்துச் சம்பாதிப்பேன். ஆகையால், என்னைத் திருடனாக்குவதே தகுதி' என்று காரணம் கூறினான்.

அதைக் கேட்டு மற்ற இருவரும் சம்மதித்து, சிறுவனைக் கயிற்றால் கட்டிக் கொண்டுபோய் அரசன் முன் நிறுத்தினார்கள். அரசன் அந்தச் சிறிய திருடனைப் பார்த்து, 'இந்த வயதிலேயே நீ திருட ஆரம்பித்துவிட்டாயா! நீ கொஞ்சகாலம் சிறையில் இரு' என்று தீர்மானம் செய்துவிட்டு, அந்த இரண்டு பிள்ளைகளுக்கும் கொஞ்சம் திரவியம் கொடுத்து அனுப்பினான். இருவரும் அந்தப் பரிசைப் பெற்றுக்கொண்டு, வெகு துயரத்தோடு வீட்டுக்குத் திரும்பினார்கள். அரசன் அவர்கள் கொண்ட துயர்க் குறியைக் கண்டு, 'துஷ்டனுக்காக நீங்கள் ஏன் துக்கப்படுகிறீர்கள்?' என்று கேட்டான். 'ஒன்றுமில்லை, அரசே' என்று சொல்லிக்கொண்டே சிறுவர் திரும்பிவிட்டனர்.

பிறகு, அரசன் ஒருவாறு சமித்திருந்து, அன்று இரவு புறப்பட்டு, அப் பிள்ளைகள் வசிக்கும் வீதி வழியே சென்றான். அங்கே அழுகுரல் கேட்க, அரசன் அந்த வீட்டண்டை நின்று உற்றுக் கேட்டான். தாயாரைக் காப்பதற்குத் தனயர்கள் தாம் செய்த தந்திரத்தைச் சொல்லிக்கொண் டிருந்தனர். அதைக்கேட்ட அரசன், மறுநாள் காலையில் அச் சிறுவனை விடுதலை செய்து, அவன் தன் தாயாரிடத்தில் கொண்டிருந்த அன்பைப் பலருக்கும் விளம்பரப்படுத்தி, அவனுக்குத் திரண்ட செல்வமும் கொடுத்து அனுப்பினான். சிறுவன் கொண்டுவந்த செல்வத்தை வைத்துக்கொண்டு தாயும் பிள்ளைகளும் சிறக்க வாழ்ந்தனர். பிள்ளாய், 'தந்தை தாய்ப் பேண்' என்னும் அமுதவாக்கை அப்பாலியச் சிறுவர்கள் எப்படி ஆதரிக்கிறார்கள் பார்த்தாயா!





## 6. தண்டும் அடிமரமும்

தாவரங்களுக்கெல்லாம் வேரே முக்கியமானதாம் என்பது உங்களுக்குத் தெரிந்த விஷயம். வேர் பூமிக்குள் பல பக்கங்களிலும் பரவி, மரம் கீழே விழாதபடி

அதைத் தாங்குவதோடு, அதற்கு வேண்டிய உணவையும் பூமியிலிருந்து கிரகித்துக் கொடுக்கிறது.



வேருக்கு மேலும், கிளைக்குக் கீழுமாக இடையிலமைந்துள்ள பாகத்திற்கு அடிமரம் என்று பெயர். வேர் சேகரித்து அனுப்பும் ஆகாரத்தை அடிமரம் சேமித்து வைத்துக் கொண்டு, அதைக் கிளை மிலாறு இலை பூ காய் முதலிய உறுப்புக்களுக்குச் செலுத்தி, அவற்றைப் போஷித்து, அந்த உறுப்புக்களுக்கெல்லாம் பலத்தைக் கொடுத்துத் தளராமல் நிலைக்கச் செய்கின்றது. தாவரங்களின் அடிப்பாகத்திற்கு அரையென்று பெயர். அந்த அரைகளை அவற்றின் தன்மைகளுக்குத் தக்கவாறு பலவகையாகப் பிரிக்கலாம்.

படரும் செடிகள் — இவை பெரும்பாலும் ஏதேனும் ஓர் ஆதாரத்தைப்பற்றித் தொத்தியேறும் தன்மையுடையன. இவற்றிற்குத் 'தொத்தும் கொடிகள்' என்று பெயர். அவரை, புடலை, பாகல், பீர்க்கு முதலிய கொடிகள் இவ்வினத்தைச் சேர்ந்தவை. இக் கொடிகளில் சில, தாம் பற்றியேறும் கொழுகொம்புகளை, வலப்புறமாகச் சுற்றி ஏறும்; சில

இடப்புறமாகச் சுற்றி ஏறும்; பூசணி, சுரை முதலிய சில கொடிகள் சாதாரணமாகத் தரையின் மேலே படர்ந்து பரவி யிருக்கும். இவற்றிற்கு மெல்லிய கம்பி போன்ற கிளைக் கொடிகள் இருப்பதனால், கொடிகள் பெருங்காற்றினால் பிய்ந்து அப்புறம் அகலாதபடி அந்தக் கிளைக் கொடிகள் காக்கின்றன.



ஓடும் கொடிகள் — இவ்வகையில் முக்கியமானது அறுகம் புல் சர்க்கரைவள்ளிக் கொடியும் இதில் சேரும். இவை பூமியின்மீது நெடிய நுனிகளால் பல பக்கங்களிலும் நீளப் படர்வதற்கு மார்க்கமில்லாமல், கணுக்களண்டை வேர்கள் விட்டு நிலைத்துப் புதிதாகத் தழைத்துச் செழிக்கின்றன. இதனால் முன்னுள்ள பழைய பாகங்கள் உலர்ந்து பட்டுப்போயினும் கொடிக்கு நாசம் உண்டாவதில்லை.

செங்குத்தாக நிற்கக்கூடிய அடிமரங்கள் — ஆல், அரசு, அத்தி, புளி, பூவரசு, தென்னை, பனை முதலிய விரு-



மரங்களெல்லாம் இந்த வகையில் சேரும். மரமானது கிளைகள் விட்டுப் பல பக்கங்களிலும் படர்ந்து வளரும்படி அதன் அடிமரம் கனத்து உறுதியாக நிற்கின்றது.

கிழங்குகள் — கிழங்குகளை அடிமரங்கள் என்று சொன்னால் உங்களுக்கு ஆச்சரியமுண்டாகுமல்லவா? மரம் செடி கொடிகளுக்கெல்லாம் அடிமரம் பூமிக்கு மேலே வளர்ந்திருக்க, கிழங்கு வகைக்குமட்டும் அது, வேரைப்போல், பூமிக்குள் அமைந்திருப்பது ஆச்சரியமல்லவா! வெங்காயம், உருளைக்கிழங்கு, கருணைக்கிழங்கு முதலிய கிழங்கு வகைகள் இந்த இனத்தைச் சேர்ந்தவையாம்.



## 7. துஷ்ட பந்துக்கள்

குடியானவன் ஒருவன் பல்லன் என்னும் பட்டி நாய் ஒன்றை வளர்த்து வந்தான். அது தன் எஜமானன் இட்டதை யுண்டு, அவனது ஆடுமாடுகளைப் பக்ஷமாகப் பாதுகாத்து வந்தது. அந்த நாய் வீரமும் திறமும் வாய்ந்தது; செய்தொழிலில் சோர்வடையாத வன்மை யுள்ளது.



பல்லன், ஒரு நாள் காட்டில் மேய்ந்துகொண்டிருந்த ஆட்டு மந்தைகளைக் காவல் செய்துகொண்டு இருந்தது. அந்த நாய் தன் எஜமானன் வந்த பிறகு, உல்லாசமாக அப்புறஞ் சென்று, திரிந்துகொண்டு இருக்கையில், ஒரு நரியும் ஓநாயும் ஓரிடத்தில் உட்கார்ந்திருக்கக் கண்டது; கண்டதும், அவற்றின் மீது வெறுப்புக்கொண்டு, வந்தவழியே திரும்பிச் செல்லத் தலைப்பட்டது. அதைக்கண்ட ஓநாய், அதன் அருகில் ஓடி வந்து, 'அண்ணா, ஏன் எங்களை இப்படி அசட்டை செய்கிறீர்? நாங்கள் உங்கள் இனத்தவர் அல்லவோ! உம்மைப் பற்றித்தான் இப்போது நாங்கள் இருவரும்

பேசிக்கொண்டு இருக்கிறோம்; தயைசெய்து வாரும், சில விஷயம் உம்மோடு பேசவேண்டும்' என்று அழைத்தது. பன்றியும் அதற்கு இசைந்து சென்று, அவர்களுடன் கூடிற்று.

அப்போது நரி நாயைப் பார்த்து 'அண்ணே, நம்முடைய உருவத்தை ஒப்பிட்டுப் பார்த்தால், நாம் எல்லோரும் ஒரே இனத்தவர் என்பதிற் சிறிதும் சந்தேகம் உண்டாகாது. அப்படியிருக்க, எங்களைக் கண்டதும் உமக்கு வெறுப்பு உண்டாவதற்குக் காரணம் என்ன?' என்று கேட்டது. அதற்கு நாய், 'ஆம் அப்பா, நீங்கள் காட்டில் இருக்கிறீர்கள், நான் நாட்டில் இருக்கிறேன்; நமக்குள் எப்படி நட்பு உண்டாகும்?' என்று சொல்லிற்று.

அதைக் கேட்ட நரி, 'நண்பரே, இருப்பிடத்தைக் கொண்டே இனமும் வேறாய் விடுமா — நம்முடைய பெரியோர்கள் பண்டைக் காலத்தில் ஒரே இடத்தில்தான் வசித்திருந்தார்கள்; நாம் எல்லோரும் வடநாட்டில் அதிக குளிர்ச்சியான பிரதேசத்தில் வசித்திருந்ததாக உயிர்நூற் புலவர்கள் இன்றும் உரைக்கிறார்கள்; நீமட்டும் எங்களை அகன்று, நாட்டில் சென்று, மனிதரோடு பழகி, நல்லவன் என்று பெயரெடுத்துக்கொண்டாய்; நாங்களோ காட்டிலேயே திரிந்துகொண்டு கஷ்டப்படுகிறோம்; பழைய உருவத்தில் உனக்குப் பாதியளவு மாறிவிட்டது; எங்களுக்குப் பழைய உருவம் அப்படியே இருக்கிறது; குளிர்நாட்டில் வசித்தபடியால் எங்கள் முகம் குறுகிக் கூர்மையாக இருக்கிறது; வாலில் மயிர் அடர்ந்து இருக்கிறது; நாங்கள் வளைதோண்டிக்கொண்டு வசிக்கிறோம்; நீயும் படுக்க வேண்டுமானால் மண்ணைப் பறித்துப் பள்ளந்தோண்டிக்-

கொண்டுதான் படுக்கிறோயாம். இவ்வளவு நற்றுணை நமக்குள் ஏற்பட்டிருக்க, நீ எங்களைப் புறக்கணிப்பது ஏற்றதாமோ?' என்று பரிந்து கூறிற்று. பழைய வரலாற்றைக் கேட்டதும் பல்லனுக்கு அவைகளிடம் பக்ஷம் உண்டாயிற்று. உடனே அது, தன் நண்பர்களைப் பார்த்து, 'அன்பர்களே, இதுவரையில் இந்த உண்மையை நான் அறியாமல் இருந்துவிட்டேன்; இனி நாம் அனைவரும் ஒன்றுகூடி உகந்து வாழ்வதே நலம் என்று தோன்றுகிறது' என்று கூறிற்று.

உடனே அம் மூன்றும் ஒன்றுகூடி உல்லாசமாக உலவப்போயின. பொழுது சாய்ந்ததும், நாய் தன் ஆட்டுமந்தையண்டை வந்து சேர்ந்தது; மற்ற இரண்டும் பல்லனைத் தொடர்ந்து மெல்ல வந்து பட்டியையடைந்தன. அவைகளைக் கண்டவுடனே ஆடுகள் அச்சங்கொண்டு ஓடத்தலைப்பட்டன. பல்லன் தன் நண்பர்களைப் பார்த்து, 'அன்பர்களே, உங்களைக் கண்டதும் ஆடுகளுக்கு அச்சம் உண்டாகிறது; ஆதலால், நீங்கள் உங்கள் இருப்பிடம் சென்று, நாளை தினம் நான் வசிக்கும் கிராமத்திற்கு வாருங்கள்; நீங்களும் மனிதரோடு பழகினால் நாளடைவில் நல்லவர்கள் ஆவீர்கள்; அப்போது ஆடுமாடுகளுக்கு உங்களைக் கண்டால் அச்சம் உண்டாகாது; போய் வாருங்கள்' என்றது. அதைக் கேட்டு நரியும் ஓநாயும் திரும்பிப் போய்விட்டன.

மறுநாள் மாலையில் நரியும் ஓநாயும் பல்லனைத் தேடிக்கொண்டு ஊருக்குள் வந்தன. பல்லன் அவைகளைப் பக்ஷத்துடன் வரவேற்று உபசரித்தது; தனக்குக் கிடைத்த உணவில் கொஞ்சம் அவைகளுக்குக் கொடுத்தது. அவைகள் அதைத் தின்றுவிட்டுச் சிறிது

நேரம் பல்லனோடு குலவிவிட்டுக் காட்டுக்குத் திரும்பின. மறுநாள் காலையில் குடியானவன் வீட்டில் ஒரு கோழியும் ஒரு வாத்தும் காணாமற் போயின. பல்லனுக்கு அகங்களெல்லாம் பதைத்தது. தான் அங்கே இருக்கும் அவைகள் எப்படிக் களவு போயின என்று அதற்குக் கோபம் உண்டாயிற்று. ஆயினும், பல்லனுக்குத் தன் இனத்தார்மேல் அப்பொழுது சந்தேகம் பிறக்கவில்லை.

அடுத்தநாள் மாலையிலும் அந்த நண்பர்கள் அங்கே வந்தார்கள். பல்லன் அவர்களைப் பார்த்து, 'அன்பர்களே, நீங்கள் பகலில் வந்தால் நலமாயிருக்கும்; மனிதர்களும் உங்களைக் கண்டு களிப்பார்கள்; நீங்களும் அவர்களுடன் பழகலாம்' என்றது. 'அன்றே, எங்களுக்கு அச்சம் அதிகம்; பகலில் வரத் தீராது. கொஞ்ச நாள் இப்படி இரவில் வந்துகொண்டிருந்து, பிறகு பகலில் வரப் பழகிக்கொள்ளுகிறோம்' என்று நரி கூறிற்று. பின்பு அவை இரண்டும் கொஞ்ச நேரம் பல்லனோடு சல்லாபித்துக்கொண்டிருந்து, வந்தனஞ் சொல்லிவிட்டு, வனத்திற்குப் போயின. அடுத்த நாள் காலையில் ஓர் ஆட்டுக்குட்டியும் ஒரு வாத்தும் காணாமற் போயின. போகவே, பல்லனுக்குத் தன் இனத்தார்மீது சந்தேகம் உண்டாயிற்று. 'அடடா, இனத்தார் என்று இரண்டு நாளும் ஏமாந்தோம்; இனியும் அப்படி இருக்கலாகாது. இன்று விழிப்புடன் இருந்து, கள்வர்களைக் கண்டு பிடிக்க வேண்டும்' என்று ஜாக்கிரதையாக இருந்தது.

மாலையானதும் இரண்டும் வந்தன; வந்ததும் பல்லனுக்கு வந்தனஞ் சொல்லின. பல்லன் பசுப்பாக இருப்பது போலவே பாவனை காட்டிற்று. அவைகள்

சிறிதுநேரம் பல்லனோடு பேசிக்கொண்டிருந்து, தம் இருப்பிடத்திற்குப் போகப் புறப்பட்டன. பல்லன் அவற்றை மெல்லப் பின் தொடர்ந்தான். கோனாய் பதுங்கிச் சென்று ஓர் ஆட்டுக்குட்டியைப் பிடித்துக் கொண்டது. நரியும் ஒரு வாத்தைப் பற்றிக்கொண்டு பரிந்து ஓடிவந்தது. பல்லனுக்கு ஆத்திரம் அடக்க முடியவில்லை. உடனே அது வீராவேசங் கொண்டு அவ்விரண்டின் மேலும் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தது. கோனாய்க்குக் குடல் நடுங்கிற்று; நரி நடுக்கங்கொண்டது. அப்போது பல்லன் அவைகளைப் பார்த்து, 'துஷ்டர்களே, உங்களை என் இனத்தவர் என்று எண்ணி ஏமாந்தேன் இனி ஒருபோதும் நீங்கள் இங்கே வரக்கூடாது; இனி வருவீர்களானால் உங்கள் உயிரை இழக்க நேரிடும். உங்களுடைய கூட்டுறவினால் என் எஜமானனுக்கு நான் துரோகியானேன். நீங்கள் உருவத்தினால் என் உறவினரானாலும், குணத்தினால் முற்றும் விரோதிகளானீர்கள். நீங்கள் இனி ஒரு க்ஷணமும் இங்கே நிற்கக்கூடாது; ஓடிப் போய்விடுங்கள்' என்றது. அதைக்கேட்டு, தப்பினதே போதும் என்று நினைத்து, அவை இரண்டும் ஓட்டம் பிடித்துக் காட்டை யடைந்தன.



## 8. நாயின் இனம் — I

பிள்ளைகளே, நீங்கள் பூனையின் இனத்தைப்பற்றி முன்பு வாசித்திருக்கிறீர்கள் இப்போது நாயின் இனத்தைப்பற்றி வாசிப்போம் நாய் மிகப் பழைய காலத்தில் குளிர் நாட்டிலுள்ள காடுகளில் வசித்திருந்த கொடிய மிருகம் என்றும்; அது நாடுகளில்

வந்து மனிதருடைய பழக்கத்தால் சாந்த குணம் அடைந்தது என்றும் உயிர் நூற் புலவர்கள் உரைக்கிறார்கள். நாயின் இனத்தைச் சார்ந்த அநேக பிராணிகள் இன்னும் காட்டிலேயே வசித்துக்கொண்டு, தம் முதாதையைப் போலவே இருக்கின்றன. அவற்றைப் பற்றி இங்கு ஆராய்வோம் :



இந்தப் படத்தைப் பாருங்கள். இது ஒரு நரியின் உருவம். இது பார்வைக்கு நாயைப்போலவே இருக்கிறது. தேகத்திலும் வாலிலும் மயிர் அடர்ந்து நீண்டிருக்கிறது. முகம் மேற்புறம் அகன்று, முனை குவிந்து இருக்கிறது. அதனால் நரி நன்றாய் மோப்பம் பிடிக்கும் சக்தியுள்ள தென்பதை அறியலாம். நரி இரவில் இரை தேடுவது வழக்கம்; அதற்கு நடு ராத்திரியில் நன்றாய்க் கண் தெரியாது. அந்தக் காலத்தில் இடுக்குகளில் நுழையவேண்டியிருந்தால், அது தன் மீசை மயிரை உபயோகித்து அளவிட்டுப் பார்க்கும். நரியின் காதைக் கவனித்துப் பார். அது பூனைக்கு இருப்பதுபோல் செங்குத்தாய் நீண்டிருக்கிறது. நரி

தான் விரும்பியபடி தன் காதைத் திருப்பி சத்தத்தை நன்றாய் உணரும்.

நரியின் பற்கள் நாயின் பற்களைப் போலவே அமைந்திருக்கின்றன. நரி, மாமிசம் முதலியவற்றைக் கடித்துத் துண்டித்து மெல்லாமல் அப்படியே விழுங்கும். நரி, நாயைப்போலவே, தன் இரையை வாயாற் கவ்விப் பிடிக்கும் தன்மையுள்ளது. கால் நகங்கள் நன்கு உறுதியாக இருப்பதனால், அவை குழிகள் தோண்ட அனுகூலமாக இருக்கின்றன. நரி, கோழி முதலியவற்றைப் பிடிக்க வரும்போது, அது கோழிக் கூட்டின் கதவுகளைத் தன் நகங்களால் பெயர்த்துத் தொளை செய்து உள்ளே புகுந்து திருடும்.

ஆண் நரிகளில் சிலவற்றிற்கு மண்டையில் ஒரு சிறு கொம்பு முளைக்கும். அது சுமார் அரை அங்குல நீளமுள்ளதாய் மயிரடர்ந்து இருக்கும். இப்படிக் கொம்பு முளைத்த நரிக்கு, மற்ற நரிகள் அடங்கி நடக்குமாம். ஆகையால், கொம்பு முளைத்த நரி, நரிகளுக்கு அரசனாக விளங்குகிறது. காடோடிகளாகத் திரியும் குருவிக்காரர்கள், இத்தகைய நரியை வேட்டையாடிக் கொன்று, அந்த நரிக் கொம்பைக் கொண்டுவந்து நாட்டில் விற்பார்கள்; மனிதர்கள் அதை விரும்பி வாங்குவார்கள். நரிக் கொம்பை வைத்திருந்தால் சகலரும் தமக்கு வசப்பட்டு, தம் சொற்படி கேட்டு நடப்பார்கள் என்று சிலர் நம்புகிறார்கள்.

நரி வெகு தந்திரமுள்ள பிராணி. நரியின் தந்திரத்தைப்பற்றி நீங்கள் பல கதைகள் கேட்டிருப்பீர்கள். அது உண்மையில் தந்திரமுள்ள பிராணியே. நரி தனக்குக் கிடைத்த இரையை எடுத்துக்கொண்டு

செல்லும்போது, எதிரில் தன் விரோதியான மிருகம் ஏதேனும் வருவதைக் கண்டால், அது அந்த இரையை மறைவான ஓர் இடத்தில் வைத்துவிட்டு, அருகில் கிடக்கும் மட்டை செத்தைகளைத் தன் வாயில் கவ்விக்கொண்டு ஓடும். விரோதி மறைந்துபோய்விட்டால், அது திரும்பிவந்து, தான் மறைத்து வைத்த அந்த இரையை எடுத்துக்கொண்டு போகும்.

நரிகளை வேட்டையாடுவோர், வேட்டை நாய்களைத் தம்மோடு கூட்டிக்கொண்டு போவது வழக்கம். வேட்டைநாய் துரத்திக்கொண்டு வருகையில் நரி தன்னாலான மட்டும் விரைவாக ஓடும். நாய் சமீபத்தில் வருவதைக் கண்டால் அந்த நரி ஒரு தந்திரம்செய்யும். அது என்ன என்கிறீர்களோ? நரிக்குப் பிருஷ்ட பாகத்தில், வாலுக்கு அடியில், இரண்டு தைலப் பைகள் உண்டு. அதிலுள்ள தைலம் சகிக்கமுடியாத துர்க்கந்தமுள்ளது. நாய் தன் அருகில் வந்துவிட்டால், நரி அந்தத் தைலத்தைக் கசியவிடும். அதன் துர்க்கந்தம் வீசினவுடனே வேட்டைநாய் திகைத்து நின்றுவிடும். உடனே நரி விரைவாக ஓடித் தப்பித்துக்கொள்ளும். இதுவும் ஒரு தந்திரந்தானே!

ஒருவன் வஞ்சகமாகவும் தந்திரமாகவும் நடந்தானுல், அவனை 'நரிக் குளிப்பாட்டி' என்று சொல்லுகிறோம். அது என்ன தெரியுமா — நரிக்கு உடலில் அதிகமாகப் பேன் பிடித்துவிட்டால், அதை ஒழிக்க அந்த நரி ஒரு தந்திரம் செய்யுமாம். அது தன் வாயில் ஒரு சிறு கொம்பைப் பற்றிக்கொண்டு ஒரு குட்டைக்குப் போய்த் தண்ணீரில் இறங்கி, முதலில் தன் பின்னங்கால்களையும், வாலையும் நனைக்கும். அப்போது அங்கிருந்த பேன்கள் எல்லாம் வயிற்றிலும், முதுகிலும் வந்து சேர்ந்துவிடும். பிறகு, நரி கொஞ்சங்

கொஞ்சமாகக் கழுத்து வரையில் தன் உடலை நனைக்கும். அப்போது அப் பேன்கள் எல்லாம் தலையிலும், முகத்திலும் ஏறி வந்து நிறைந்துவிடும். பிறகு, நரி தன் தலையை வாயளவுக்குத் தண்ணீரில் முழுக்கும்; அப்போது அப்பேன்களெல்லாம் நரியின் மூக்கண்டை தங்க முடியாமல், அந்த நரி தன் வாயில் பற்றிக்கொண்டிருக்கும் கட்டையின்மேல் வந்து ஏறிக்கொள்ளும். ஏறக்குறைய எல்லாப் பேன்களும் கட்டையில் ஏறிக்கொண்டதைக் கண்டவுடன், நரி அக் கொம்பைத் தண்ணீரில் போட்டுவிட்டு ஓடிப்போய்விடுமாம். இதனால்தான் 'நரிக்குளிப்பாட்டி' என்னும் பழமொழி உலகத்தில் வழங்குகின்றது. இதுவும் ஒரு விந்தைதானே!

கிழட்டு நரிகள் தம் இரையை வேட்டையாடிப் பிடிக்கச் சக்தியற்றிருக்கும்போது, நண்டு முதலியவற்றைப் பிடித்துத் தின்னும். கிழட்டு நரி தன் வாலை நண்டின் வளைக்குள் மெல்ல நுழைக்கும். அப்போது நண்டு அதைக் கண்டு, ஏதோ ஒரு ஐந்து தன் வளைக்குள் வருகிறதென்று நினைத்துத் தன் கொடுக்கினால் அதை இறுகப் பற்றிக்கொள்ளும்; நரி அதை உணர்ந்து, தன் வாலை விரைந்து இழுக்க, நண்டு வெளியே வந்து விழும். உடனே நரி அதைப் பிடித்துக் கொன்று தின்னும். இதுவும் ஒரு தந்திரம் அல்லவா!

கோழி, வாத்து, ஆட்டுக்குட்டி, முயல், மான் கன்று முதலியவற்றை நரி பிடித்துத் தின்னும். நரி, அவைகளைப் பிடிக்கும்போது அவை சத்தம் செய்யாதபடி அவற்றைக் கழுத்தண்டை கவ்விப் பற்றிக்கொள்ளுவது வழக்கம். நரி, பூமியில் புதைத்துள்ள பிணங்களையும் தோண்டித் தின்பதுண்டு.



# 9. நாயின் இனம் - II

இது ஒரு குள்ள நரி. இதன் பெயரைக் கேட்கும்போதே இது நரியினும் சிறியதென்று உங்களுக்கு விளங்கும். இது விரைவாக ஓட வல்லது; தண்ணீரிலும் நன்றாய் நீந்தும். குள்ள நரி பகலில் ஏதேனும் ஒரு மரத்தின் அடியில் பள்ளம் தோண்டிக்கொண்டு



பதுங்கி யிருந்து, இரவானதும் இரை தேடப் புறப்படும். இதற்கு இரவில் நன்றாய்க் கண் தெரியும். குள்ள நரி எதையும் தின்னும்; நண்டுகளைப் பிடித்துத் தின்னப் பிரியப்படும்; பிராணிகள் ஏதும் அகப்படாவிட்டால் குள்ள நரி கனிகளையும் தின்பதுண்டு. சமயம் வாய்த்தால் ஊர்களில் புகுந்து கோழி, வாத்து முதலிய ஜந்துக்களைப் பிடித்துக் கொண்டுபோய்த் தின்னும். குள்ள நரி அதிக தந்திர முள்ளது. இதற்கும் பிருஷ்ட பாகத்தில் தைலப்பை உண்டு. வேட்டைநாய் முதலிய விரோதிகள் சமீபத்தில் வந்துவிட்டால்,

ரி அந்தத் தலைதனைக் கடிய விட்டு, அதற்கு முண்டாக்கித் தப்பித்துக்கொண்டு ஓடிவிடும்.

இது ஓர் ஓநாயின் படம். இதைக் கோனாய் என்றும் கூறுவதுண்டு. இது விசேஷமாகச் சீதள தேசங்களில்தான் வசிக்கும். அதனால் இதற்கு உடலி-லும், வாலிலும் மயிர் அடர்ந்து இருக்கிறது. கோனாய் மிகவும் கொடிய ஜந்து. கோனாய்கள் கூட்டங் கூடி வேட்டை மேற் சென்று, காட்டுக் குதி-ரை, கழுதை முதலிய-வற்றைக் கொன்று தின்-னும். சமயம் வாய்த்-தால் மனிதர்களையும் கொல்ல வகை தேடும். சாதாரணமாக ஓநாய் தனித்தே வசிக்கும்; விரோதிகள் தன்னைத் தாக்கிக்கொண்டு வந்தால், காற்-றுக்கு எதிர் முகமாக ஓடித் தப்பித்துக்கொள்ளும். இதற்குப் பிருஷ்ட பாகத்தில் தைலப்பை கிடையாது.



இது ஒரு செந்நாயின் படம். செந்நாய் என்றால் சிவப்பான நிறமுடைய நாய் என்று அர்த்தம். இது சாதாரண நாயைக்காட்டிலும் பெரியது; உடலின் முன்பாகம் பருத்தும், பின்பாகம் சிறுத்தும் இருக்கும். நாயினத்தைச் சார்ந்த மற்ற மிருகங்களை ஒருகால் பழக்கலாம்; செந்நாயை ஒருகாலும் பழக்க முடியாது. இது ஆடு, மாடு, மான் முதலிய மிருகங்களை வேட்டை-யாடிக் கொல்லும். சமயம் வாய்த்தால் புலி, சிறுத்தை-களையும் ஒரு கை பார்க்கவல்ல தைரியமுள்ளது. செந்-

நாய்க்கும் வாலின்கீழ் தைலப்பை உண்டு. செந்நாய் அதை ஒரு விதமாக உபயோகிக்கின்றது. தன் இரைக்கான பிராணிகள் நடமாடும் இடங்களில் அத்தைலத்தைத் தெளித்து வைக்கும். அந்தக் கெட்ட



நாற்றத்தினால் பிராணிகள் மயங்கிக் கிடக்கும்போது, செந்நாய் விரைந்து சென்று அவைகளை வேட்டையாடும். சில சமயங்களில் அந்தப் பிராணிகளின் முகத்திலும் இந்தத் தைலத்தைத் தடவப் பார்க்கும்.

பிள்ளைகளே, இந்தப் பாடத்தில் வந்துள்ள நரி, குள்ள நரி, கோனாய், செந்நாய் முதலிய பிராணிகள் குணம் குறிகளில் பெரும்பாலும் நாயை ஒத்திருக்கின்றன. இதை விளக்க இன்னொரு விஷயம் கூறுகிறேன் கேளுங்கள் : வெய்யிற் காலத்தில் நாய் ஓடும் போது பார்த்திருக்கிறீர்களா — எப்படி ஓடுகின்றது? — நாக்கைத் தொங்கவிட்டுக்கொண்டு ஓடுகிறதல்லவா? அது ஏன் தெரியுமா? நாய்க்கு வேர்வைநீர் உடலின் வழியாகக் கழிவதில்லை; அது நாக்கின் வழியாகவே கழிகின்றது. அதனால்தான் நாய் நாக்கைத் தொங்கவிட்டுக்கொண்டு ஓடுகிறது. மேலும் வெய்யிற் காலத்தில் நாய்க்கு உடலின் மயிர் உதிர்ந்துவிடுகின்றது; சில

நாய்களுக்கு அப்போது சொறியும் உண்டாகிறது. வேர்வை முழுதும் வெளிப்படாவிட்டால் சில நாய்களுக்குப் பைத்தியம் பிடிக்கும். இந்தச் செய்கைகள் எல்லாம், காட்டிலிருக்கும் இதன் இனத்து மிருகங்களுக்கும் உண்டு. இதனாலும் மேலே கூறிய மிருகங்கள் நாயின் இனத்தைச் சேர்ந்தவை என்று நன்கு புலப்படுகின்றது.



## 10. வெறுப்பு விருப்பானது - I

வேலன் — வேங்கடேசா, சவுக்கியந்தானே ?

வேங்கடேசன் — சவுக்கியந்தான், நண்பர்களுடைய நல்ல எண்ணம் இருக்கும்போது, சவுக்கியம் இல்லாமற் போகுமா ?

வேலன் — அண்டை வீட்டில் இப்போது இருப்பது யார்? யாரோ புதிதாக வந்தாற்போல் காண்கிறதே.

வேங்கடேசன் — புதியவர்தான், யாரோ நல்லசாமி என்பவராம்.

வேலன் — அதென்ன, அயல் வீட்டாரை யாரோ என்கிறீர், வெறுப்பாகவும் கூறுகிறீரே, என், அவர் நல்லவர் அல்லவோ ?

வேங்கடேசன் — நல்லவரா — கெட்டவராக இராமலிருந்தால் போதாதா ! இவரைப் பார்த்து இங்கு இருப்பவர்களும் கெட்டுப் போவார்கள் போல் தோன்றுகிறது.

வேலன் — அப்படியானால் கஷ்டந்தான் ; இருக்கட்டும், அவர் சங்கதிதான் என்ன ?

வேங்கடேசன் — சங்கதியா—எங்களிருவருக்கும் எந்த விஷயத்திலும் பொருத்தம் கிடையாது. பொது விஷயங்களிலும் அவருக்குப் புத்தி செல்வதில்லை. இன்னும் என்ன சொல்லவேண்டும்?

வேலன் — இருக்கட்டும், இன்னும் என்ன?

வேங்கடேசன் — இன்னுமா — ஆட்டம் பாட்டு முதலிய விஷயங்களிலாவது ஒற்றுமை உண்டா — அதுவும் கிடையாது. இப்படிப்பட்டவ ரிடத்தில் நமக்கு எப்படி நட்பு உண்டாகும்?

வேலன் — அவர் இந்த ஊருக்குப் புதியவர்தானே; எப்பொழுதாவது நீங்கள் இந்த விஷயங்களுக்கு அவரை அழைத்ததுண்டா?

வேங்கடேசன் — அழைப்பானேன் — அவரே வந்து ஏன் கலக்கக்கூடாது. நான்கு பேரோடு கலக்கிற சுபாவமே அவருக்கு இருப்பதாகத் தெரியவில்லை. கொஞ்சம் கையழுத்தக்காரர்போல் தோன்றுகிறது.

வேலன் — எந்த விஷயத்திலாவது அவர் தம்மை அப்படிக் காட்டிக்கொண்ட துண்டோ?

வேங்கடேசன் — பிறர் விஷயத்தில் எப்படியாவது இருக்கட்டும், தம் விஷயத்திலேயே தாராளமான சிந்தை அவருக்குக் கிடையாது. அவருடைய செல்வத்திற்கு அவர் செய்யும் செலவு மிகவும் மட்டென்றே சொல்லலாம். கடுகளவுக்கும் கணக்குப் பார்க்கிறாரே.

வேலன் — தம் விஷயத்தில் அப்படி யிருந்தாலும், தரும விஷயத்தில் தாராளமாக இருக்கக்கூடாதா?

அதை வாங்கிக்கொள்ளவேண்டும் என்பது என் எண்ணம். சரியான விலைக்கும் கேட்டேன். அது அவருக்குத் தெரிந்திருந்தும் அந்தக் குதிரையைச் சந்தைக்கு அநுப்பி வழியில் விற்றுவிட்டாராம். இது கிடக்கட்டும்; ஒரு செடி விஷயத்தில் அவருடைய மனம் எனக்குத் தெளிவாகத் தெரிந்துவிட்டது. நமது வீட்டுப் பெண்டுகள் ஏதோ ஒரு செடி வேண்டுமென்று தோட்டக்காரன் மூலமாகக் கேட்டனுப்பினார்களாம். நமது தோட்டக்காரன் அவருடைய தோட்டக்காரனைக் கேட்டானாம். அவன் தன் எஜமானரைக் கேட்டானாம்; அதற்கு என்ன பதில் சொன்னாரது — முடியாது என்றதும் போய்விட்டது. 'சரிதான் இருக்கட்டும். அந்தச் செடியை யாராவது தொடப்போகிறார்கள், பத்திரமாகப் பார்த்துக்கொள்' என்றாராம். இதைப்பற்றி என்ன நினைக்கிறாய்? இதுவும் இருக்கட்டும். இன்னொன்று கேள்: வெகுநாளாக என்னிடம் ஒரு வேலைக்காரன் இருந்தான். வீரன், உனக்கும் தெரியுமே; அவன் ஒரு நாள் அதிக்கிரமித்துப் பேசினான். எனக்குக் கோபம் வந்து அவனை வேலையினின்றும் விலக்கிவிட்டேன். அவன் நமது அண்டை வீட்டுக்காரரிடம் போனான். போனதும் அவனுக்கு ஏதோ வேலை கொடுத்து, அவனைத் தம்மிடம் அமர்த்திக்கொண்டார். அமர்த்திக் கொள்ளட்டும்; மரியாதைக்காவது என்னை ஒரு சொல் கேட்க வேண்டியதில்லையா? ஒன்றுமா இல்லை, வந்ததே போதுமென்று அவனை வேலையில் வைத்துக்கொண்டார். இதைவிட நமக்கு என்ன விரோதம் செய்யவேண்

டும். நான் சொன்னது ஒருகால் விரோதத்தினால் சொல்லுவதாகத் தோன்றும். வீட்டை எரியக் கொடுக்க வாசு அதோ வருகிறான், அவனைக் கேட்டால் உண்மை தெரியும். அப்பா வாசு, இங்கே வா, ஜாப்தாவினால் ஏதாவது தொகை ஏற்பட்டதா?

வாசு — ஐயா, ஆண்டவன் அருளால் அவ்வளவு நஷ்டத்திற்கும் தொகை கிடைத்துவிட்டது.

வேங்கடேசன் — அதெப்படி? அன்று நான் பார்த்த பொழுது கொஞ்சம் தொகைதானே கைமொப்பம் ஆயிருந்தது: இதற்குள் எப்படி முழுத் தொகையும் கிடைத்துவிட்டது?

வாசு — முதலில் கொஞ்சந்தான் கிடைத்தது: அன்று தங்கள் அயல்வீட்டார் — நல்லசாமி என்பவரைக் கண்டேன். யோசிக்கலாம் என்று கூறினார். அந்தப் புண்ணியவான் மறுநாள் காலையே எங்கள் கிராமத்திற்கு வந்து, என்னைப்பற்றியும், எனக்கு சேர்ந்த நஷ்டத்தைப் பற்றியும் விசாரித்து, உண்மையை உணர்ந்து, என்னைக் கூப்பிட்டு நூறு ரூபாய் அளித்தார். கடவுள்தான் அவருக்குக் கிருபை செய்ய வேண்டும். ஏழை நான் அவருக்கு என்ன செய்யப்போகிறேன்.

வேங்கடேசன் — நூறு ரூபாயா—ஆச்சரியந்தான்.

வாசு — ஆம் ஐயா, நூற்றுக்கு அரைக் காசும் குறையவில்லை. அந்தத் தொகையைக் கொண்டு என் வீட்டைக் கட்டி முடித்தேன். முன்போலவே ஒரு வண்டிமாடும் வாங்கிக்கொண்டேன்.

முன்னிலும் இப்போது சுகமாக ஜீவித்து வரு-கிறேன்.

வேங்கடேசன் — ஐந்நூறு என்றால் கொஞ்சமா — பெரிய தொகைதான். அதில் பத்தில் ஒரு பங்-கும் கொடுப்பார் என்று நான் நினைத்ததில்லை. இந்த நன்றியை நீ என்றும் மறக்கலாகாது.

வேலன் — மறந்தால் எனக்கு உண்ண உணவும், உடுக்க உடையும் கிடைக்காமற் போகும். அவரையே யன்றி எனக்கு உதவி செய்த உத்தமரை யெல்-லாம் நான் ஒருபோதும் மறவேன். போய்வரு-கிறேன்.



## 11. வெறுப்பு விருப்பானது - II

வேலன் — வேங்கடேசா, இதைக் கண்டால் அவரைக் கையழுத்தக்காரர் என்று சொல்வதற்கு நியாய மில்லையே.

வேங்கடேசன் — ஒருகால் நான் எண்ணியது குற்ற-மாக இருக்கலாம். ஆனால், அந்த உபகாரம் அவர் மனமாரச் செய்ததோ இல்லையோ என்பது இன்-னும் எனக்குச் சந்தேகந்தான். அந்தக் குதிரை விஷயத்தையும், செடி விஷயத்தையும் சிந்தித்-துப் பார்.

வேலன் — இரு, அதோ உன் தோட்டக்காரன் ஏதோ ஒரு தொட்டியைத் தூக்கிக்கொண்டு வருகிறானே, அதென்ன?

வேங்கடேசன் — செங்கா, என்னடா, அது?

சேங்கன் — அண்டை வீட்டு அம்மா நமது அம்மாவுக்கு இந்தச் செடியைக் கொடுத்தனுப்பினார்கள். வாங்கிக்கொண்டு வருகிறேன்.

வேங்கடேசன் — ஏது, இந்தச் செடி அவர்கள் தோட்டத்தில் ஏராளமாக இருக்கிறதோ ?

சேங்கன் — இல்லை, இன்னும் ஒரு சிறு கன்றுதான் இருக்கிறது; அம்மா விரும்பிக் கேட்டதாக அயல் வீட்டு எஜமானர் அறிந்துகொண்டு, அதைப் பத்திரமாகப் பாதுகாத்துக் கொடுத்தார். அம்மா கேட்டபோது, இது மிகவும் சிறிய செடியாய் இருந்தமையால் கொஞ்சம் வளர விட்டுக் கொடுக்கலாம் என்று எண்ணி யிருந்தாராம். அதற்காகவே அதை ஒருவரும் தொடாமல் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளும்படி தம் தோட்டக்காரனுக்குத் திட்டம் செய்தாராம். இப்போது பெரிய செடியை நமக்குக் கொடுத்துவிட்டு, சிறிய செடியைத் தாம் வைத்துக்கொண்டார்.

வேலன் — வேங்கடேசா, செடியைப் பற்றிய சந்தேகம் இப்போதாவது தீர்ந்துவிட்டதா — செய்கையைப் பார்த்தால், அவர் மிகவும் பெருந் தன்மை வாய்ந்தவராகவே காண்கிறதே.

வேங்கடேசன் — ஆம், அப்படித்தான் நாம் மதிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் குதிரையைப் பற்றிய குறை எப்படி யாகுமோ தெரியவில்லை.

வேலன் — அதோ நிற்கிறானே, அவன் அவருடைய குதிரைக்காரன் தானே ?

வேங்கடேசன்—ஆமாம், அவன் தான்—முத்தன். அடே முத்தா, இப்படி வா. குதிரையை விற்ருயிற்று? நான் கேட்டதற்கு மேல் எவ்வளவு கிடைத்தது?

முத்தன் — நல்ல விலைக்குத்தான் போயிற்று. ஐயா என் இஷ்டம்போல் விட்டிருந்தால் அதை இன்னும் அதிக விலைக்கு விற்றிருக்கலாம். அவருக்கு அப்படிச் செய்ய இஷ்டமில்லை. சந்தையில் ஜட்கா வண்டிக்காரருக்கு விற்றுவிடச் சொன்ஞர்.

வேலன் — ஏன்?

முத்தன் — குதிரை ஒழுங்குதான், சமயத்தில் மோசஞ் செய்யும். ஒரு சமயம் ஐயா அவசரமாக ரெயிலுக்குப் போகவேண்டி யிருந்தது. போய்க்கொண்டேயிருந்த குதிரை இடக்கு செய்ய ஆரம்பித்து விட்டது. பிறகு ரெயில் தவறி, அவசரமான வேலை யெல்லாம் கெட்டுவிட்டது. அதுமுதல் அதை ஒழித்துவிடவேண்டும் என்று எண்ணிவிட்டார்.

வேங்கடேசன் — அப்படியா அது, அதனுல்தான் நான் கேட்டதற்கும் கொடுக்கவில்லையோ?

முத்தன் — ஆமாம், ஐயா என்னிடம் சொன்ஞரே. 'இந்தக் குதிரை அவருக்குச் சரிப்படாது, கெட்டது என்று தெரிந்திருந்தும் நாம் அதை அவருக்குக் கொடுக்கக்கூடாது' என்று சொன்ஞர்.

வேங்கடேசன் — சரிதான், போய் வா.

வேலன் — குதிரையைப்பற்றி இப்போது என்ன நினைக்கிருய்?

வேங்கடேசன் — என்ன நினைக்கிறது, அவரை மிகவும் பெரிய மனிதரென்றே நினைக்கவேண்டும். அதற்கென்ன தடை. ஆனாலும், என் வேலைக்காரன் விஷயமாக அவர் செய்தது எனக்கு வெறுப்பு வெறுப்புதான்.

வேலன் — அவசரப்படுவானேன், அதை ஆராய்ந்து பார்த்தால் தெரிந்துவிடுகிறது. இத்தனை விஷயம் விளங்கிற்றே, அதுவும் விளங்காமற் போகுமா — வீரனும் அதோ வருகிறானே, நல்ல சமயந்தான்.

வேங்கடேசன் — இங்கே வரமாட்டான், நம்மைப் பார்த்தால் அந்தப்புறமாக ஒதுங்கிப் போய்விடுவான், பார்த்துக்கொண்டே இரு.

வேலன் — இல்லை, இல்லை, நம்மிடந்தான் வருகிறான். தலைவணங்கி வருகிறானே தெரியவில்லையா?

வீரன் — சாமி, என்னை மன்னிக்கவேண்டும். ஏழை, ஏதோ தெரியாமல் எதிர்த்துப் பேசிவிட்டேன். என்னை மன்னிக்கவேண்டும்.

வேங்கடேசன் — ஏது, புதிய எஜமானிடத்தில் இதற்குள் கசப்பு ஏற்பட்டுவிட்டதோ?

வீரன் — அப்படி ஒன்றுமில்லை, அவர் எனக்கு எஜமானாக இருந்ததில்லை. நான் அவரை வேலை கேட்டது உண்மைதான். ஆனால் அவர் எனக்குப் புத்திமதிகள் சொல்லி, 'இரண்டு நாள் இங்கே இரு; பிறகு போய் உன் எஜமானரிடம் சேர்ந்துவிடு; இவ்வளவுகாலம் நீ அங்கே இருந்துவிட்டு, இப்போது நீ வேறிடம் போவது சரியல்ல' என்றார். இன்று கட்டாயம் போகவேண்டும்

என்று தூண்டினார்; எனக்கும் தங்களைவிட்டு இருக்க மனம் பிடிக்கவில்லை.

வேங்கடேசன் — சரி, போய் வேலைகளைப் பார்.

வேலன் — வேலைக்காரன் விஷயம் ஒன்றுதான் என்றாயே — இப்போது என்ன நினைக்கிறாய்?

வேங்கடேசன் — பலவிஷயம் சொல்லிப் பயனில்லை. 'சந்தேகம் விபரீதம்' என்பது சரியான வாக்கியம். இனி ஒருவர்மீதும் அவநம்பிக்கை கொள்ளமாட்டேன். இவ்வளவு நல்ல மனிதரை அனாவசியமாக அவநம்பிக்கையால் அவமதித்தேன். இன்று உன்னால் எனக்கு அவர்மேல் இருந்த வெறுப்பெல்லாம் விருப்பாயிற்று.

வேலன் — சந்தோஷம், போய் வருகிறேன்.

---

## 12. தபால்

அயலூரிலுள்ள நமது உறவினருக்கும் நண்பர்களுக்கும் க்ஷேம சமாசாரங்களைத் தெரிவிக்க அடிக்கடி நிருபம் எழுதுகிறோம். அவர்களும் நமக்குக் கடிதம் எழுதுகிறார்கள். நாம் எழுதும் கடிதங்கள் எப்படிப் போய் அவர்களுக்குச் சேருகின்றன? அவர்கள் எழுதும் கடிதங்கள் எப்படி வந்து நமக்குச் சேர்கின்றன, என்பதை ஆராய்வோம்:

நாம் ஓர் ஊருக்குப் பிரயாணம் செய்வது போலவே கடிதங்களும் பிரயாணம் செய்கின்றன. நாம்

ஓர் ஊருக்குப் போக விரும்பினால் வண்டியில் போகிறோம்; அதிக தூரமானால் ரெயிலில் ஏறிச் செல்கின்றோம். கடலுக்கு அப்புறமுள்ள பிரதேசங்களுக்குக் கப்பல் மூலமாகப் பிரயாணம் செய்கிறோம். இவ்விதமாகவே, நாம் எழுதும் கடிதங்களும் போய் அந்தந்த இடங்களிலுள்ள மனிதர்களிடத்தில் சேர்கின்றன.





ஒருவன் சென்னையிலிருந்து ஒரு கடிதம் எழுதி, பெங்களூரில் உள்ள ஒரு நண்பனுக்கு அனுப்புகிறான். அந்தக் கடிதம் எப்படிப்போய் பெங்களூரைச் சேர்கிறது என்பதைக் கவனிப்போம்: சென்னையி லிருப்பவன் தான் எழுதிய கடிதத்தை உறையிலிட்டு மூடி, அதற்குச் செலுத்தவேண்டிய கட்டணத்திற்காகத் தபால் தலை வாங்கி உறையின் மேல் ஒட்டி, தபாலாபிசுக்குக் கொண்டுபோய், கடிதங்கள் போடுவதற்காக அங்கே அமைத்துள்ள தபால் பெட்டியில் போடுகிறான். தபால் சேவகன் அந்தக் கடிதங்களை யெல்லாம் சேர்த்து எடுத்து, அவ்வூரின் பேரும் தேதியும் காலமும் காட்டும் முத்திரையை அந்தத் தபால் தலைமேல் பதியும்படி குத்துகிறான்; பிறகு தபால் உத்தியோகஸ்தர் அந்தக் கடிதங்களை யெல்லாம் ஒரு பையில்



போட்டுக் கட்டி, கட்டின மூட்டையை ஒருவரும் அவிழ்க்-



காதபடி அதற்கு அரக்கு முத்திரையிட்டு, ஒரு வண்டி-யில் போட்டு, ரெயிலுக்கு அனுப்பு-வார். ரெயிலிலுள்ள தபால் உத்தி-யோகஸ்தன் அந்தத் தபால் மூட்-டையைப் பெற்றுக்கொள்ளுகிறான்.



ரெயில் வண்டித் தொடரில் தபாலுக்கென்று தனியே ஒரு வண்டியுண்டு. அந்த வண்டியின் பலகைச் சுவரில் அநேக சிறு அறைகள் வகுக்-கப்பட்டு இருக்கும். தபால் உத்தியோகஸ்தர்கள், தம்மிடம் வந்து சேரும் கடித மூட்டை-களை அவிழ்த்து, கடிதங்களை ஊர்வாரியாகத் தாம் பிரித்து, அறைகளில் இட்டு, அந்தந்த ஊர்களுக்குக் கொடுக்க வேண்-டிய கடிதங்களை ஒன்றுசேர்த்து, சிறு பைகளிற் போட்-



டுக் கட்டி, அக்கங்கே ரெயிலண்டை வரும் தபால்கார-னிடம் கொடுப்பார்கள். அவன் அதைப் பெற்றுக்-கொண்டு தன் ஊருக்குப் போவான்.

இப்படியே பெங்களூருக்குப் போட்ட கடிதமும் பெங்களூருக்குப் போய்ச் சேரும். தபால் மூட்டை பெங்களூர் தபாலாபிஸைச் சேர்ந்தவுடன், தபால் உத்தி-யோகஸ்தர் அந்த மூட்டையைப் பிரித்து, அதில் உள்ள கடிதங்களை எடுத்து, தபால்காரனிடம் கொடுப்பார். தபால்காரன் அந்தக் கடிதங்க-ளின்மேல் ஒரு முத்திரை இடு-வான். அந்த முத்திரையில் அந்த ஊரின் பேரும், தேதியும், மணியும் பதிந்து இருக்கும். இதோ இந்தக் கடிதத்தைப் பார். இதன்மேல் இரண்டு



முத்திரைகள் இருக்கின்றன. ஒன்று சென்னையில் இட்ட முத்திரை, மற்றொன்று பெங்களூரில் போட்ட முத்திரை. பிறகு அந்தக் கடிதங்களைத் தபால்காரன் எடுத்துக் கொண்டுபோய், விலாசத்தின்படி அவரவர்-களுக்குச் சேர்ப்பான். இதுதான் கடிதங்கள் போய்ச் சேரும் முறை. இப்படியே கப்பல் மூலமாகவும் கடிதங்கள் செல்கின்றன.



## 13. பறவைகளின் அலகுகள்

பறவைகளின் பாதங்கள் அவற்றின் வாழ்க்கைக்கும், அவை வசிக்கும் இடங்களுக்கும் ஏற்றவாறு அமைந்-திருக்கும் என்னும் விஷயத்தை மூன்றும் வாசக புஸ்த-

கத்தில் வாசித்து அறிந்திருக்கிறோம். இப்போது அவற்றின் அலகுகளும் அவ்வாறே அமைந்திருக்கும் உண்மையை இங்கே வாசித்து அறிந்துகொள்வோம் :

மாமிச பட்சணிகள்— வல்லூறு, பருந்து, கருடன், ராஜாளி முதலிய பறவைகள் இந்த இனத்தைச் சேர்ந்தவை. இவற்றின் அலகுகள் மிகவும் உறுதியாய் நீண்டு முனை வளைந்திருக்கும். இவைகளுக்குக் கூராயும் கூர்மையுமான பார்வை யுண்டு.



இவை, வேறு பறவைகள் பறந்து கொண்டிருக்கும்போதே அவற்றைத் தம் பாதங்களால் பற்றிக் கொண்டுபோய், அலகினால் கிழித்துத் தின்னும். தரையில் மேயும் கோழிக்குஞ்சு முதலிய சிறிய பறவைகளையும், இவை ஆகாயத்தினின்றும் பாய்ந்து வந்து, அடித்துக்கொண்டு போகும். மற்றப் பறவைகள் அஞ்சி நடுங்கத்தக்க பராக்கிரமம் இவைகளுக்கு ஏற்பட்டு இருப்பதனால், இந்த இனத்துப் பறவைகளுக்குப் 'பக்ஷி ராஜா' என்னும் பெயர் வழங்கும்.

ஆந்தையும் இந்த இனத்தைச் சேர்ந்ததே. ஆந்தைக்குப் பகலில் நன்றாய்க் கண் தெரியாது. அது



பகலெல்லாம் மரப் பொந்துகளிலும், சுவர்த் தொளைகளிலும் மறைந்திருந்து, இரவானதும் வெளியே வந்து இரை தேடுகிறது. அந்தை, வயலெலி, தவளை முதலிய சிறு பிராணிகளைக் கொன்று தின்னும். இதன் அலகு குறுகி வளைந்து, மாமிசத்தைக் கிழிப்பதற்கு ஏற்றதாக முனை கூர்மையாய் இருக்கிறது.

மீன் குத்திப் பறவைகள்— மீன் குத்தி ஒன்றே இந்த இனத்திற் சேர்ந்தது. இந்தப் பறவைக்கு அலகு நீண்டு கூரா யிருக்கும். மீன் குத்தி, நீர் நிலைகளுக்கு



மேலே நிலைத்துப் பறந்துகொண்டே யிருந்து, தண்ணீ-ரின் மேல்மட்டத்திற்கு வருகிற மீனை, அதிவேகமாகப் பாய்ந்து பற்றிக்கொள்ளும். இது மேலே நிலைத்துப் பறந்துகொண்டே யிருந்து, நீரிலுள்ள ஜந்துக்களை நன்றாய்ப் பார்க்க வல்லது.



சதுப்பு நிலப் பறவைகள்— கொக்கு, நாரை முதலிய பறவைகள் சதுப்பு நிலங்களில் அசைவற்றுத் தங்கி-யிருந்து, தம் பக்கமாக வரும் மீன், தவளை முதலிய ஜல-ஜந்துக்களைப் பிடித்துத் தின்னும்.

'ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கோக்கு'

என்னும் பாட்டை நீங்கள் இங்கு எண்ணிப் பாருங்கள்.

மரங்குத்திப் பறவைகள் — மரங்குத்தி யென்னும் ஒருவகைப் பறவை மட்டும் இந்த இனத்தைச் சேர்ந்தது. இதில் பெரியதும், சிறியதுமாக இரண்டு வகைகள் உண்டு. இந்தப் பறவை செங்குத்தான மரத்தில் அடி முதல் நுனி வரையில் அதிவிரைவாக நடந்து செல்லும். இப்படி நடப்பதற்கு இதன் வாலும் உதவியாக இருக்கிறது. இது மரத்தில் நடந்து செல்லும்போதே தன் அலகினால் குத்திக்கொண்டு போய், மரப் பட்டைக்குள் புழு, பூச்சிகள் தங்கியிருக்கும் இடத்தை உணர்ந்து, தன் நீண்டு உறுதியான அலகைச் செலுத்தி, அங்குள்ள பூச்சிகளைத் தன் நாக்கினால் நக்கி இழுத்து விழுங்கும். இப் பறவையின் நாக்கு மிகவும் மெல்லியதாய், நீண்டு நன்றாய் வளையக் கூடியதாய், பிசின் போன்ற பசை யுடையதாய் இருப்பதனால், மரத்தின் இடுக்கி லுள்ள சிறு பூச்சிகளையும் இது வெகு சுலபமாகப் பற்றிக் கொள்ளுகிறது.



இதன் நாக்கின் நுனியிலுள்ள ஒரு வகை முள்போன்ற அவயவமும் இரை கொள்வதில் இப் பறவைக்கு அநுகூலமாக அமைந்து இருக்கிறது.



தட்டை அலகுள்ள பறவைகள்—குள்ளவாத்து, தாரா முதலிய பறவைகள் இந்த வகையிற் சேரும். இவற்றின் அலகுகள், மற்றப் பறவைகளின் அலகுகளைப் போல கூராமல், அகன்று நீண்டிருக்கின்றன. இவற்றின் அலகுகள் மிருதுவாகவும், கொஞ்சம் விரியக் கூடியவைகளாகவும் இருக்கும். அலகுகளின் மேலும் கீழும் ஓரங்களில், சீப்பின் பற்கள் போன்ற சிறிய பற்கள் வரிசையாக அமைந்திருக்கின்றன. நாக்கும், அன்னமும் நன்றாய் அமையப் பொருந்தி யிருப்பதனால் இரையில் ஒட்டிக்கொண்டுள்ள சேறு முதலியவற்றை இந்தப் பறவைகள் நன்றாய்ப் பிரித்து விடுகின்றன. இந்த ஜாதிப் பறவைகள் நீரிலும், சேற்றிலுமுள்ள மீன், நண்டு முதலியவைகளையும், புழு, பூச்சிகளையும் பற்றி பற்களால் அமுக்கிக் கொன்று விழுங்கும். இரையுடன் வரும் சேற்றை, நீரை அலகின் இரு பக்கங்களிலுமுள்ள வாய்க்கால்களின் வழியே வெளிப்படுத்திக் கழித்துவிடும்.



கொட்டையை உடைத்துத் தின்னும் பறவைகள்—பச்சைக் கிளி, வெள்ளைக் கிளி, பஞ்சவர்ணக் கிளி முதலிய பறவைகள் இவ்வினத்தைச் சேர்ந்தவை. இதன் மேலலகு கொடுவாள்போல் வளைந்து நுனியில் கூர்மையாய் இருப்பதோடு, இரண்டு பக்கங்களிலும் கத்தி போல் கருக்காகவும் அமைந்திருக்கின்றன. அடியலகு மேலலகைவிடச் சிறுத்து அகன்று இருக்கிறது. இந்தப் பறவைகள் பெரும்பாலும் கொட்டைகளை உடைத்து



அவற்றின் உள்ளிருக்கும் பருப்புக்களையும், காய் கனி-களையும் நன்றாய்க் கோதித் தின்னும்.

தானியம் கொறிக்கும் பறவைகள்— ஊர்க்குருவி, தூக்கணங்குருவி முதலிய பறவைகள் இந்த இனத்தைச் சேர்ந்தவை. இவைகளின் அலகுகள் மிகவும் உறுதியாயிருக்கின்றன. அவை குட்டையாய் முனை குவிந்து தடித்து இருக்கும். இந்தப் பக்ஷிகள் தானி-யங்களைக் கொறித்து உமியையும் மேல் தோலையும் போக்கி, மணியை மட்டும் விழுங்கும்.



தானியங்களை விழுங்கும் பறவைகள்— பலவகையான புறாக்கள் இந்த இனத்திற் சேர்ந்தவை. புறா-வின் அலகு கொஞ்சம் நீண்டு மிகவும் மிருதுவா யிருக்கிறது. இவ்வினத்துப் பக்ஷிகள் தானி-யங்களை அப்படியே விழுங்கக் கூடியவை. அன்றியும் தண்-ணீரை உறிஞ்சிக் குடிக்கக்கூடிய தன்மையும் இவற்றிற்கு உண்டு. வேறு எந்தப் பக்ஷியும் இப்படித் தண்ணீரை உறிஞ்சிக் குடிக்க முடியாது.



சீய்த்துக் குத்தித் தின்னும் பற வைகள்—இந்த இனத்தில் பலவகைக் கோழிகளும், மயில், கவுதாரி முத-லிய பக்ஷிகளும் சேரும். இந்தப் பக்ஷிகள் இரையைத் தம் கால்களால் சீய்த்துக் கொண்டே அலகினால் குத்தியெடுத்துத் தின்னும். இவற்றின்



அலகுகள் குறுகி முனை குவிந்து வளைந்து, மிகவும் உறுதியாய் இருக்கின்றன.



எல்லாவற்றையும் தின்னும் பறவை — காக்கை இந்த இனத்தில் சேர்ந்தது. காக்கை கண்டதையெல்லாம் தின்னும். மாமிசங்களையும் தானிய முதலியவற்றையும் குத்தித் தின்னும்படி காக்கையின் அலகு இரும்புக் கட்டையைப்போல் உறுதியாக நீண்டு முனையில் சிறிது வளைந்து இருக்கிறது.

தேன் உறிஞ்சும் பறவை— தேன் சிட்டு என்னும் சிறு பறவை இந்த வகையிற் சேர்ந்தது. இது பறந்து



கொண்டே (உட்காராமலே) தன் நீண்ட அலகினால் பூவிலுள்ள தேனைக் கிரகித்துக்கொள்ளும் திறமை-

யுடையது. அதனால், இதன் அலகு நீண்டு மெல்லியதாகவும் கூர்மையாகவும் வளைந்தும் இருக்கிறது. ரீங்காரப் பறவைக்கும் இந்த வல்லமை உண்டு.

பறந்துகொண்டே இரையை உட்கொள்ளும் பறவை — தலம என்னும் பறவை இவ்வினத்திற் சார்ந்தது. இது மாலைக்காலத்தில், பூமிக்குச் சுமார் முப்பது நாற்பது அடி உயரத்தில், வெகு வேகமாய் சுற்றிச் சுற்றிப் பறந்துகொண்டேயிருக்கும். இந்தப் பக்ஷி பறக்கும்போது இதற்குத் தலை இருப்பதாகவே தெரியாது. சிறுவர்கள் இதைத் தலையில்லாக் குருவி என்பார்கள். இது ஏன் இப்படிப் பறக்கிறது தெரியுமா? இரை தேடுவதற்காகத்தான் இது இப்படி அதிக வேகமாய்ப் பறக்கிறது. இதன் வாய் மிகவும் அகன்றிருக்கும். இது, தன் வாயைத் திறந்துகொண்டே அதிவேகமாகப் பறப்பதனால், மாலைக்காலத்தில் கூட்டமாய்ப் பறக்கும் ஈ, கொசுகு முதலிய ஜந்துக்கள் இதன் வாய்க்குள் அகப்பட்டு இதற்கு இரையாகின்றன. இப்படிச் செய்வதனால் இதற்கு 'ஆகாய வலை' என்னும் பெயரை அங்கிலேயர் வழங்குகிறார்கள்.



இவ்வாறே ஒவ்வொரு பறவையும் தனக்கு வேண்டிய ஆகாரம் முதலியவற்றைத் தேடிக்கொள்வதற்கு அனுகூலமாகக் கடவுள் அததற்குத் தகுந்த உறுப்புக்களை அமைத்திருக்கிறார். அக் கடவுளது அறிவையும், ஆற்றலையும் எடுத்துக் கூற எவரால் ஆகும்!



## 14. நீர்ப்பாசனம்

நம்முடைய உயிர்வாழ்க்கைக்கு உபயோகமான உணவுப் பொருள்களை வயல்களில் பயிரிடுகின்றோம். அந்த வயல்கள் நன்செய் என்றும் புன்செய் என்றும் இரு வகைப்படும். நன்செய்க்கு நீராதாரம் அதிகமும் வேண்டும்.

நமது நாட்டில் வயல்களுக்கு ஏற்பட்டிருக்கும் நீராதாரங்களை இங்கு ஆராய்வோம்: ஜலத்திற்கு மழையே முக்கிய ஆதாரம். மழை எப்போதும் பெய்து கொண்டிருப்பதில்லை; மாரிகாலத்திற் பெய்யும் மழை



சிற்சில இடங்களில் ஆறுகளாகக் கூடி ஓடுகின்றன; அந்த ஆற்றுநீரைக் கிருஷிகர்கள் கால்வாய்களின் மூலமாகக் கொண்டுபோய் வயல்களுக்குப் பாய்ச்சிக்கொள்ளுகிறார்கள். ஆற்றுநீர் நேரே பாயும் வயல்களுக்கு 'ஆற்றுப் பாய்ச்சல் நிலம்' என்று பெயர். இந்த நிலங்-

களுக்குப் பெரும்பாலும் நீர்க் குறைவு நேராது. ஆற்றுப் பெருக்கு அற்ற காலத்திலும் கிருஷிகர்கள் ஆற்றின் அகட்டில் கால் வெட்டி, அங்கே ஊறும் நீரைக் கொண்டுபோய் வயல்களுக்குப் பாய்ச்சிக்கொள்வார்கள்.

சில இடங்களில் ஆற்றுக்கு அணைகட்டித் தண்ணீரைத் திருப்பி, அடுத்துள்ள ஏரிகளில் செலுத்தித் தேக்கவைத்து, மதகின் மூலமாகக் கால்வாய் வழியே கொண்டுபோய் வயல்களுக்குப் பாய்ச்சிக் கொள்வது வழக்கம். ஆற்றின் ஆதாரமில்லாத ஏரிகளில் மழைநீர் நிறைந்து நிற்கும்; அது வயல்களுக்குக் கொஞ்சகாலம் வரையிற் பாயும். இந்த இரண்டு வகையான பாய்ச்சலுள்ள வயல்களுக்கு 'ஏரிப்பாய்ச்சல் நிலம்' என்று பெயர்.

சில காலங்களில் ஆற்றில் நீரோட்டம் குறைந்துவிடுவதனாலும், பருவத்தில் மழை பெய்யாமையாலும், ஏரியில் தண்ணீர் அருந்தட்டலாக இருக்கும். அப்போது, கிருஷிகர்கள் கையேற்றம், கபிலையேற்றம், இறைகூடை முதலியவற்றின் உதவியினால் குளம், தாவு, கிணறு முதலிய நீர்நிலைகளினின்றும் தண்ணீர் இறைத்து வயலுக்குப் பாய்ச்சிக்கொள்வார்கள்.



குளம் குட்டைகளில் தண்ணீர் மேலாக இருந்தால் கை

ஏற்றம் போட்டு இறைப்பார்கள். கிணறு முதலிய நீர் நிலைகளில் தண்ணீர் ஆழத்தில் இருந்தால் கை யேற்றம் போட்டு இறைக்க இயலாது. அப்படிப்பட்ட சமயங்களில் பெரிய ஏற்றம் போட்டு இறைப்பது வழக்கம். பெரிய ஏற்றத்திற்குப் பதிலாகச் சில இடங்களில் 'கபிலை ஏற்றம்' போட்டு இறைப்பதும் உண்டு. கபிலை யேற்றம் என்பது எருதுகள் கட்டித் தண்ணீர் இறைக்கும் ஏற்றம்.



சில இடங்களில இறைகூடையால் தண்ணீர் இறைப்பதுண்டு. கால்வாயில் தண்ணீர் போகும் போது வயல் தண்ணீர் மட்டத்திற்குச் சிறிது உயரத்தில் இருந்தால், இறைகூடையால் இறைத்துக்கொள்ளலாம். வயல் அதிக உயரத்திலிருந்தால் இப்படிச் செய்ய முடியாது. அப்போது கையேற்றம் போட்டே இறைக்க நேரிடும்.

கிருஷிகர்கள் இவ்வாறெல்லாம் பயிர்களுக்குத் தண்ணீர் பாய்ச்சி, உணவுப் பொருள்களை விளையச் செய்கிறார்கள். காலமழை பெய்து, ஆறுகள் ஓடி, ஏரி குளங்கள் நிரம்பினால் எங்கும் க்ஷேமம் உண்டாகும்.



ஆறு ஏரி முதலிய ஜலாதாரங்கள் இல்லாத இடத்தில் குடிகள், குளம் கிணறு முதலிய நீர்நிலைகளிலிருந்து கஷ்டப்பட்டு, தண்ணீர் இறைத்துப் பயிரிட நேரிடுகின்றது.



## 15. கொசுகு

இதோ பறக்கிற ஜந்துவைப் பார். அது இன்னது என்று உனக்கு முன்னமே தெரியும். இராத்திரியில் வந்து, சதா நமக்குத் துன்பம் செய்யும் ஜந்து இன்னதென்று உனக்குத் தெரியாமல் இருக்குமா — கொசுகு என்னும் ஜந்து மிகவும் கொடியது. இது பார்வைக்கு

மாத்திரம் அழகாக இருக்கிறது. அது செய்யும் காரியமோ ஒருவருக்கும் சம்மதமாக இராது. கொசுகு நம்மைச் சுற்றிக் கூட்டங்கூடி இருக்கவேண்டும் என்று எண்ணுவோர் உலகத்தில் எவரேனும் இருப்பரோ!

கொசுகு ஒரு நிமிஷமும் நம்மைச் சும்மா விடுவதில்லை; எந்நேரமும் தொந்தரவு செய்கிறது. நம்முடைய ஜோலிக்கு அது வாராவிட்டால், நாம் ஏன் அதன் பேச்சுக்குப் போகப் போகிறோம். அது இரண்டு விதமான விஷமம் செய்கிறது. இரவானதும் பறந்து வந்து எந்நேரமும் சத்தமிட்டுக்கொண்டே இருக்கும், இல்லாவிட்டால் நம்மைக் கடித்து இரத்தம் குடிக்கும். இந்த இரண்டு காரியங்களும் நமக்குச் சம்மதப்படுவதில்லை. அது கடித்தால் தான் நமக்கு உபத்திரவம் உண்டாகிறதென்றாலோ, அது பாடினாலும் நமக்குக் கேட்கப் பிடிப்பதில்லை. கொசுக்கள் அதிகமாயிருந்தால் அருகில் அசுத்த ஜலம் தேங்கியிருக்கிறதென்று நாம் தெரிந்துகொள்ளலாம்.



கொசுகைப்பற்றி விவரமாகத் தெரிந்துகொள்வதற்குத் தண்ணீர் தேங்கியுள்ள ஊத்தைக் குட்டைகளே ஏற்ற இடம். அங்கே போய் அது முதலில் எப்படி உற்பத்தியாகிறது என்பதைக் கவனிப்போம்.

இதோ பார், பழுப்பு நிறமான துண்டு ஒன்று தண்ணீரின்மேல் மிதக்கிறது. அது என்ன தெரியுமா — கொசுகின் முட்டைகள் ஒரு துரும்பில் ஒன்றாகச்

சேர்ந்து ஒட்டிக்கொண்டு, ஒரு படகுபோல் மிதந்து வருகின்றன. கொசுகு பறந்துபோய்த் தன் முட்டைகளைத் தண்ணீரின்மேல் இடுகிறது. இதைக் கேட்டால் உனக்கு விந்தையாகத்தான் இருக்கும். அதன் சங்கதி அதற்குத் தெரியாதா — தெரியாமலா அது போய்த் தண்ணீரின்மேல் முட்டையிடுகிறது.

சில நாட்களுக்குப் பிறகு இந்த முட்டைகளிலிருந்து சதா ஆடுகிற வால் ஒன்று புறப்படுகிறது. பிறகு அது முட்டையின் அடிப்புறமாகச் சிறிய புழுப்போல் வெளிப்படுகிறது. அது தண்ணீரின்மேல் களித்து செல்வதை நன்றாகக் கவனித்துப் பார். எவ்வளவு விசித்திரமாக இருக்கின்றது? அதன் வாலின் முனையிலும் மயிர் முளைத்திருக்கின்றது. அந்த மயிரின் வழியாகத்தான் அந்தப் பருவத்தில் அக்கொசுகு மூச்சுவிடுகிறது. இது எவ்வளவு ஆச்சரியம்! மூக்கிற்குப் பதிலாக வாலில் உள்ள மயிர் உபயோகப் படுகிறதே! கொசுகின் புழு தண்ணீரின் உள்ளிருந்து மேலே வருவதைப் பார்த்தால் வெகு வேடிக்கையா யிருக்கும். வாலும், தலையும் ஒன்று கூடும்படி உடலை வளைத்துவளைத்து உதைத்துக்கொண்டே மேலேறி வரும். கொசுகின் மேல்தோல் தண்ணீரின்மேல் மிதப்பதை நீ பல இடங்களில் பார்த்திருக்கலாம்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு அந்த ஜந்துக்கள் மாறுதல் அடைகின்றன. அந்த ஜந்துக்களுள்ள தண்-

னீரை அசைத்தால், அவை அமிழ்ந்து அமிழ்ந்து தண்ணீரின் அடி மட்டத்திற்குப் போய்விடுகின்றன. பிறகு அவை தம் தோலை உரித்துக்கொண்டு முழு உருவமுள்ள கொசுக்களாக வெளியே வருகின்றன. அவை தண்ணீரிலிருந்து வெளியே வந்தபின் தம் இறக்கைகளை உலரவைக்கும்போது வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். அந்த சமயத்தில் அது தண்ணீரில் விழுந்துவிட்டால், உள்ளே மூழ்கிவிடும். முதலில் தாம் உற்பத்தியான இடமே அவைகளுக்கு மரணஸ்தானமாகிவிடும். இதுவும் ஒரு விந்தையல்லவா!



இறக்கை உற்பத்தியாகி வெளியே வரும்போதே கொசுக்களுக்குத் தம்மைப் போஷித்துக்கொள்ள வேண்டிய அவயவங்கள் எல்லாம் பூர்த்தியாக அமைந்திருக்கின்றன. தொளைப்பதற்கும் உறிஞ்சுவதற்கும் வேண்டிய அவயவங்களும் ஏற்பட்டிருக்கின்றன. முட்டையிலிருந்து வெளி வந்ததும் ஆண் கொசுக்கள் அண்டையிலுள்ள செடிகளின் சாரத்தை உறிஞ்சி உண்கின்றன. பெண் கொசுக்கள் மிருகங்களையாவது மனிதரையாவது கடித்து இரத்தத்தை உறிஞ்சி யுண்டு ஜீவிக்கின்றன. கொசுக்கள் கடிப்பதனால், நமக்கு ஒருவகைக் காய்ச்சல் உண்டாகிறது.

வதற்கு அந்த இரும்பு வட்டம் கொஞ்சம் பெருக்க வேண்டும்; பிறகு அது மரத்தோடு சமமாகப் பொருந்துவதற்குக் கொஞ்சம் இறுகவேண்டும். இந்த இரண்டு காரியங்களையும் செய்வது எது? இரும்புத் தகட்டை நெருப்பிலிட்டுக் காய்ச்சியபோது அது கொஞ்சம் பெருத்து இருக்கவேண்டும்; அதைச் சக்கரத்தோடு பொருத்தி, அதன்மேல் தண்ணீர் விட்டபோது அத் தகடு கொஞ்சம் இறுகி யிருக்கவேண்டும் என்பது நமக்கு நன்கு விளங்குகிறது. இதனால் பதார்த்தங்கள் சூட்டை அடைந்தால் பெருக்கின்றன என்பதும் குளிர்ச்சியை அடைந்தால் இறுகுகின்றன என்பதும் விளங்குகின்றன. இரும்பு ஒரு கனபதார்த்தம்; அது நெருப்பிலிட்டுக் காய்ச்சிச் சூடேற்றும்போது கொஞ்சம் அகன்று, அதன்மேல் தண்ணீர் விட்டுக் குளிரச் செய்யும்போது இறுகிவிடுகிறது. அதனால்தான் கருமான் சக்கரத்திற்குக் கட்டுக் காய்ச்சி விடும்போது இப்படிச் செய்கிறான்.

கனபதார்த்தம் மாத்திரமே இப்படியாகிறது என்று எண்ணவேண்டாம். திரவ பதார்த்தம், வாயு பதார்த்தம் ஆகிய மற்ற இரண்டு பதார்த்தங்களும் சூட்டைப்பெற்ற காலத்தில் பெருத்தலையும், குளிர்ச்சியைப்பெற்ற காலத்தில் இறுகுதலுமாகிய தன்மைகளை அடைகின்றன. அவற்றையும் இங்கே விவரிப்போம்.

வீட்டில் பால் காய்ச்சுவதைப் பார்த்திருக்கிறீர்களா! என்ன செய்கிறார்கள்? பாலை ஒரு பாத்திரத்தில் வார்த்து, அடுப்பின்மேல் வைத்து, தீயிட்டுக் காய்ச்சுகிறார்கள். பால் காயும்போது பொங்கிப் பாத்திரத்தின்மேலே வந்து வழியப் பார்க்கிறது. உடனே

கிறேன். இப்போது என்ன ஆகிறது? குழையிலுள்ள நீர் முதலில் ஊற்றிய அளவிற்கே வந்துவிட்டது. இப்படியே சாதாரண ஜலத்திலுள்ள சூட்டை முற்றும் அகற்றி விட்டால் அது இறுகிப் பனிக்கட்டியாகிவிடும். அதிசீதளமான தேசங்களில் தண்ணீர் உறைந்து பனிக்கட்டியாக மாறிவிடுகின்றது. இதைக் கவனித்தால், திரவ பதார்த்தமும் சூட்டை அடையுங் காலத்தில் பெருகுகிறது என்பதும், குளிர்ச்சியை அடையுங் காலத்தில் இறுகுகிறது என்பதும் நமக்கு நன்றாய் விளங்கும்.

இனி, வாயு பதார்த்தத்தைப் பற்றிக் கவனிப்போம். மேகம் கூடி மழை பெய்யும் விதத்தைக் கவனித்தால் இந்த விஷயம் விசதமாகும். தண்ணீரில் வெப்பம் தாக்குவதால், அந்த நீர் ஆவியாக மாறி, மேலே சென்று, சூடு ஆறியவுடன் அந்த ஆவி மேக ரூபத்தை அடைந்து, குளிர்காற்றுப் பட்டவுடன் மழையாகப் பெய்கின்றது. தண்ணீர் சூடு அடைந்து ஆவியாகும்போது, அது அதிக இடம் பெற்றுப் பரவிப் பெருகுகின்றது. அந்த ஆவியே குளிர்ச்சி அடைந்தால் இறுகித் தண்ணீராக மாறுகின்றது. இப்படியே வாயு பதார்த்தங்கள் எல்லாம் சூட்டை அடைந்தால் பெருகும், குளிர்ச்சியை அடைந்தால் இறுகிவிடும்.

மேலே கூறிய விஷயங்களால் திட திரவ வாயு பதார்த்தங்கள் மூன்றையும் அநேகமாகச் சூடு பெருகச் செய்யும் என்பதும் குளிர்ச்சி இறுகச் செய்யும் என்பதும் நமக்கு விளங்குகின்றன. அதனால் சூடு பெருகச் செய்யும், குளிர்ச்சி இறுகச் செய்யும் என்னும் பிரமாணம் உலகில் ஏற்பட்டிருக்கிறது.



## 17. ஐக்கியக் கொடி (யூனியன் ஜாக்)

நாம் ஒரு கோவிலுக்குப் போனால் முன்பு கோபுரத்தைத் தரிசிக்கிறோம். உள்ளே சென்றால் எதிரில் கொடிமரம் ஒன்று ஓங்கி நின்றிருக்கக் காண்கிறோம். சில கோவில்களுக்குக் கோபுரம் இல்லாமற் போனாலும் கொடிமரம் இல்லாமற் போகாது. கொடி மரத்தைத் 'துவஜஸ்தம்பம்' என்றும் கூறுவதுண்டு. ஆண்டவனுடைய ஆணையைக் காட்டுவதற்குக் கொடிமரம் முக்கியமான அறிகுறியாக விளங்குகின்றது.

அரசர்களுடைய ஆணையைக் காட்டுவதும் அவரவர்கள் கொண்ட கொடிகளேயாம். முற்காலத்தில் இந்தத் தமிழ் நாட்டில், சேர சோழ பாண்டியர் என்ற முடியுடை வேந்தர் மூவர் இருந்தனர். அவர்களில் சேரர் விற்கொடியையும், சோழர் புலிக்கொடியையும், பாண்டியர் மீனக் கொடியையும் தம் அறிகுறியாக அமைத்துக்கொண்டு இருந்தனர்.

இப்படியே பாரதம் முதலிய நூல்களில் கூறும் அரசர்களும் தமக்கென வெவ்வேறு கொடிகளை மேற்கொண்டிருந்தனர். தருமருக்கு முரசக் கொடி, அர்ஜுனனுக்கு அனுமக் கொடி, துரியோதனனுக்கு அரவக் கொடி என அவரவர்கள் விரும்பியவாறு தம் கொடிகளை மேற்கொண்டிருந்தனர்.

இந்தக் காலத்திலும் ஒவ்வொரு தேசத்து அரசரும் ஒவ்வொரு கொடியைத் தம் அறிகுறியாக வைத்திருக்கின்றனர். கடவுளுக்கு ஆலயம் அமைந்திருப்பது போல, காவலருக்குக் கோட்டைகள் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு கோட்டையிலும் ஒவ்வொரு கொடிமரம் உண்டு.

நம்மை அன்புடன் ஆண்டு பாதுகாத்து வரும் பிரிடிஷ் ராஜ்யத்தின் கொடிக்கு ஐக்கியக் கொடி என்று பெயர். இதை அங்கில பாஷையில் யூனியன் ஜாக் (Union Jack) என்று கூறுவர். 'யூனியன்' என்றால் ஐக்கியம், அதாவது ஒன்று சேர்ந்தது என்பது பொருள். இதனால் ஐக்கியக் கொடி, பல கொடிகள் ஒன்று சேர்ந்து உண்டானது என்பது விளங்குகிறது : அதன் விவரத்தை இங்கு விளக்குவோம் :

இந்த ஐக்கியக் கொடியை உற்றுக் கவனித்தால் இதில் மூன்று சிலுவைகள் ஒன்றுகூடி அமைந்திருப்பதாகத் தெரியும். சிலுவை என்பது கிறிஸ்து மதஸ்தர் மேற்கொள்ளும் ஓர் அடையாளம். அது சாதாரணமாக + கூட்டல் குறியைப்போல் இருக்கும். ஐக்கியக் கொடியில் மூன்று சிலுவைக் குறிகள் ஏற்பட்டதன் காரணத்தைக் கூறுவோம்.

பிரிடிஷ் ராஜ்யத்திற்குத் தாயகமாக விளங்கும் 'கிரேட் பிரிட்டன்' (Great Britain) என்னும் தேசம் மூன்று பிரிவினையுடையது. அவை — இங்கிலந்து, ஸ்காத்லந்து, அயர்லந்து என்பனவாம். முற்காலத்தில் இந்த மூன்று நாடுகளும் தனித்தனி ராஜ்யமாக இருந்தன. அப்போது, மூன்று நாட்டுக்கும் வெவ்வேறு கொடி இருந்தது. பிறகு 1707-ஆம் ஆண்டில் ஸ்காத்லந்தும், 1801-ஆம் ஆண்டில் அயர்லந்தும் அங்கில அரசாட்சியில் சேர்ந்துவிட்டன. அந்தக் காலத்தில், இந்த மூன்று ராஜ்யங்களின் கொடிகளையும் ஒன்று சேர்த்து அதற்கு 'ஐக்கியக் கொடி' என்று பெயரிட்டனர். அந்தக் கொடியின் விவரமாவது :

# UNION JACK



1

ஸென்ட்
ஜார்ஜ்
இங்கிலாந்து



2

ஸென்ட்
ஆன்ட்ரூ
ஸ்காட்லாந்து



3

ஸென்ட்
பாட்ரிக்
அயர்லாந்து



ஐக்கியக் கொடி (யூனியன் ஜாக்)

காரம் செய்திருந்தார். சுமார் ஐம்பது பேர் அவ்வேலைக்கு விண்ணப்பம் செய்துகொண்டார்கள். அவர்கள் அனைவரும் தம்மை வந்து நேரில் காணும்படி அவர் தேதியும் காலமும் குறித்துத் தெரிவித்திருந்தார். குறித்த வேளையில், விண்ணப்பம் செய்தோர் அனைவரும் அவரைக் காணவந்தார்கள். அவர்களில் ஒருவன்



தவிர மற்றெல்லோரும் யோக்கியதா பத்திரங்களும் சிபாரிசுக் கடிதங்களும் கொண்டுவந்திருந்தார்கள். அந்தப் பிரபு, வந்தவர்களை எல்லாம் தனித்தனியே வரவழைத்து விசாரித்து, ஒவ்வொருவரையும் உற்றுக் கவனித்தபிறகு, அவனவன் கொண்டுவந்திருந்த யோக்கியதா பத்திரங்களையும், சிபாரிசுக் கடிதங்களையும் படித்துப்பார்த்து அனுப்பிவிட்டார். கடைசியாகச் சிபா-

சிபாரிசுக் கடிதம் எதுவுமில்லாத இளைஞன் ஒருவன் வந்தான். பிரபு அவனையும் அழைத்து விசாரித்து, அவனையே வேலையில் அமர்த்திக்கொண்டார்.

அந்தப் பிரபு, வேலைக்கு வந்தவர்களில் ஒவ்வொருவரையும் அழைத்து விசாரித்தபோது, அவருடைய நண்பர் ஒருவர் அருகில் அமர்ந்திருந்து அங்கு நடந்தவைகளை நன்றாக கவனித்துக்கொண்டு இருந்தார். கடைசியாக, சிபாரிசு எதுவுமில்லாத சிறுவனுக்கு, அப்பிரபு அவ்வேலையைக் கொடுத்ததைக் கண்டு, நண்பர் அளவிறந்த ஆச்சரியமடைந்து, 'ஐயா, அத்தனை பேர் சிறந்த யோக்கியதா பத்திரங்களும் சிபாரிசுக் கடிதங்களும் கொண்டுவந்திருந்தும், அவர்களை எல்லாம் அனுப்பிவிட்டு, ஒரு சிபாரிசும் இல்லாத இச் சிறுவனை நீர் ஏற்றுக்கொண்டதற்குக் காரணம் யாது?' என்று கேட்டார்.

அதற்கு அந்தப் பிரபு, 'நண்பரே, இச் சிறுவன் ஒரு சிபாரிசும் கொண்டுவரவில்லை என்று சொல்லுவது சரியன்று: இவன் அநேக சிபாரிசுகளைத் தானே அடைந்திருக்கிறான். அதிலும் இவன் கொண்டுவந்த சிபாரிசுகள் மற்றவர்கள் கொண்டுவந்த சிபாரிசுகளைப் பார்க்கிலும் மிகவும் சிறந்தவை' என்றார்.

எனினும், அப்பிரபுவின் நண்பர் அவரைப் பார்த்து, 'நண்பரே, இச் சிறுவன் ஒரு கடிதமும் கொண்டுவரவில்லையே, நான் இங்கேயே இருக்கிறேன், நடந்ததை எல்லாம் நன்றாய்க் கவனித்துக்கொண்டும் இருந்தேனே.' என்றார்.

அதற்குப் பிரபு, 'ஐயா, நீர் சொல்வது உண்மை தான். இச் சிறுவன் சிபாரிசுக் கடிதம் ஒன்றும் கொண்-

யிடம் கொடுக்கவில்லை என்பதும் வாஸ்தவந்தான். ஆயினும், அவன் தனது ஒழுக்கத்தால் மற்றவர்களைக் காட்டிலும் தானே சிறந்தவன் என்பதைத் தெரிவித்துக்கொண்டான், அதைக் காட்டிலும் வேறு சிபாரிசு என்ன வேண்டும்?' என்றார்.

'அப்படியா, அவனிடம் என்ன ஒழுக்கத்தை நீர் கண்டீர்?' என்று கேட்டார் நண்பர்.

அதற்குப் பிரபு, 'என்ன ஒழுக்கமா — முதலில் இச் சிறுவன் இந்த அறைக்குள் நுழையும்போதே தன் கால்களைக் காலடி மெத்தையில் சுத்தமாகத் துடைத்துக்கொண்டு வந்தான். கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்ததும், அதை முன்னிருந்தபடியே மூடினான். அதனால் இவன் சுத்தமுள்ளவன் என்பதும் ஜாக்கிரதையுள்ளவன் என்பதும் விளங்கின' என்றார்.

நண்பர் சந்தோஷத்துடன், 'ஆம், அது உண்மைதான், நானும் பார்த்தேன். ஆனால் விசேஷ வேலைக்கு இவையே முக்கிய குணங்களென்று நான் நினைக்கவில்லை: இன்னும் ஏதேனும் கவனித்தீரோ?' என்று கேட்டார்.

பிரபு, புன்சிரிப்புடன், 'ஐயா, இச் சிறுவன் வந்து பீடத்தின்மேல் உட்கார்ந்த சிறிது நேரத்துக்கெல்லாம் முடவன் ஒருவன் வந்தான்; அவனுக்கு உட்கார இடமில்லை. அவன் இடமில்லாமல் திகைப்பதைக் கண்டு, இச் சிறுவன் எழுந்து தன்னிடத்தில் அவனை உட்காரச் செய்து உபசரித்தான்; ஆதலால் இச் சிறுவனுக்குப் பெரியோரிடத்தில் கௌரவம் பாராட்டும் தன்மையும் பிறர் வருத்தம் காணச் சகியாத இரக்கமும் உண்டென்பது தெளிவாயிற்று' என்றார்.

இலைகள் சூரியனுடைய ஒளியையும் உஷ்ணத்தையும் நாடுகின்றன. சூரிய உஷ்ணம் இல்லாவிட்டால் இலை நன்றாய் வளர்வதில்லை. ஒரு மரத்தை உற்றுப்பார்: அது எவ்வளவு அடர்ந்து தழைத்து வளர்ந்திருந்தாலும், ஒவ்வோர் இலையும் தனக்கு வேண்டிய சூரிய உஷ்ணத்தையும் காற்றையும் பெறத்தக்க விதமாக அமைந்திருக்கின்றது. இது வெகு ஆச்சரியகரமான விஷயமல்லவா?

இனி, ஈர்க்கில் இலைகள் முளைத்திருக்கும் விதத்தைக் கவனி. சில ஜாதி யிலைகள் எதிரெதிராக இணைந்து முளைத்திருக்கின்றன; சில, ஒன்றைவிட்டு ஒன்றாக மாறி மாறி முளைத்திருக்கின்றன. இந்த இலைகளால் மரத்திற்கு உண்டாகும் உபயோகம் என்ன என்பதை ஈண்டுக் கவனிப்போம்.

இலையில் நரம்புகள் ஓடியிருக்கும் இடம் தவிர மற்ற இடங்களில் கண்ணுக்குத் தெரியாத அணுப்பிரமாணமான நுண்ணிய தொளைகள் நிரம்பி யிருக்கின்றன. பூதக் கண்ணாடியைக் கொண்டு பார்த்தால் அந்தத் துவாரங்கள் நன்றாய்த் தெரியும். அந்தத் தொளைகளை இலையின் சுவாசக் குழைகள் என்று சொல்லலாம். ஏனென்றால், இலைகள் இந்தத் தொளைகளின் மூலமாக வாயுவைச் சுவாசிக்கின்றன. ஓர் இலையில் ஒரு சதுர அங்குலப் பரப்பில் சுமார் 1,50,000 தொளைகள் அமைந்து இருக்கிறனவாம். பிராணிகள் பிராணவாயுவைச் சுவாசித்துக் கரியமிலவாயுவை வெளி விடுகின்றன; தாவரங்களோ கரியமிலவாயுவைச் சுவாசித்துக்கொண்டு பிராணவாயுவைச் சுத்தப்படுத்திப் பிராணிகளுக்கு உதவி செய்கின்றன. இது எவ்வளவு ஆச்சரியம்!

இலையிலுள்ள துவாரங்கள் அவைகள் சுவாசிப்பதற்கு மூக்கைப்போல் உதவுகின்றன என்று மேலே சொன்னோம். அந்தத் துவாரங்களால் மற்றொரு காரியமும் நிகழ்கின்றது. அது என்னவெனில், வேர்கள் பூசாரத்தோடு நீரைக் கிரகித்து மாத்திரத்து உதவுகின்றன என்னும் விஷயத்தை நீங்கள் முன்பு வாசித்து அறிந்திருக்கிறீர்கள்; அந்த நீர் மாதத்தின் மூலமாக கேஸி இலைக்கு வருகிறது. நீரிலுள்ள சாரத்தை இலை கிரகித்துக்கொண்ட பிறகு, நீர் மாத்திரம், வியர்வை நீர்போல், இலையில் உள்ள துவாரங்களின் வழியாக வெளிப்பட்டு, சூரிய உஷ்ணத்தினால் ஆவியாகப் பரிணமித்துப் போய்விடுகின்றது. வேரிலிருந்து வரும் தண்ணீர் இப்படிக் கழிந்து போகாவிட்டால், இலை, மேலும் மேலும் புதிய பூசார நீரைக் கிரகிக்க முடியாமற் போய்விடும். இதனால் தாவரங்கள் தமக்கு வேண்டிய வாயுவைச் சுவாசிப்பதற்கும் கழிவுடையான நீரை நீக்குவதற்கும் இலைகள் இன்றியமையாத கருவிகளாக இருக்கின்றன என்பது விளங்குகிறது.

சாதாரணமாக எல்லா இலைகளுக்கும் மேற்புறம் வழுவழுப்பாகவும் அடிப்புறம் சொரசொரப்பாகவும் இருக்கின்றன. பூசணி முதலிய சிலவற்றின் இலைகளுக்கு மேற்புறமும் சொரசொரப்பாக இருப்பதன் காரணம் யாது? சில இலைகளுக்கு அதிக உஷ்ணம் கூடாது. அப்படிப்பட்ட இலைகளில் அதிக உஷ்ணம் தாக்காதபடி, அந்த இலையின் மேற்புறத்தில் உள்ள சொரசொரப்பான இலை முட்கள் அல்லது சுணைகள் நின்று கடிதாகக் காப்பாற்றுகின்றன. அதனால் அந்தச் சுணையை இலைக்கு ஏற்பட்டுள்ள ஒருவகையான மெல்லிய கவசம் என்று சொல்லலாம்.

மரம் தழைத்து இருந்தால் நிழல் தருகின்றது. மரத்தின் நிழல் குளிர்ச்சியாக இருக்கிறது. இதற்குக் காரணம் யாது? மரத்தின் இலைகள் சூரிய உஷ்ணம் கீழே விழாமல் தடுக்கின்றன. அதுவுமன்றி, இலையின் மேற்புறத்தில் கழிகிற நீர் ஆவியாகப் பரிணமிக்கிறதனால், மரத்தை அடுத்துள்ள ஆகாயம் குளிர்ச்சி யடைகின்றது. இதனால் மரத்தின் நிழல் குளிர்ச்சியைத் தந்து, அதன் அடியில் தங்குவோருடைய தாபத்தை நீக்கி, இன்பத்தை விளைவிக்கின்றது.



## 20. குற்றத்தை ஒப்புக்கொண்ட குணவான்

அரசன் ஒருவன் தன் நாட்டில் நீதி தவறாமல் செங்கோல் செலுத்தி வந்தான்; அவன் அடிக்கடி தன் நாட்டிலுள்ள வித்தியாசாலை, வைத்தியசாலை, சிறைச்சாலை முதலிய இடங்களுக்குச் சென்று அவரவர்களுக்கு நேரும் குறைவு நிறைவுகளை விசாரித்து, அவற்றிற்குத் தக்க ஏற்பாடுகள் செய்வது வழக்கம்.

ஒருநாள் அவ் வேந்தன் சிறைச்சாலைக்குள் சென்று பார்வையிடுகையில், அங்கே கைதிகளில் சிலர், காலில் விலங்குடன் வேலை செய்துகொண்டிருக்கக் கண்டான். அப்போது அவ் வரசன் அவர்களை அணுகி, ஒவ்வொருவனையும் பார்த்து, 'அப்பா, நீ என்ன குற்றம் செய்தாய்? எதற்காகத் தண்டனை அடைந்தாய்?' என்று வினவினான்.

அதற்கு, முதலில் இருந்த குற்றவாளி அரசனை வணங்கி, 'ஐயனே, நான் யாதொரு குற்றமும் செய்த

தில்லை; சாக்ஷிகள் எனக்கு விரோதிகள்; அவர்கள் என்மேல் வீண்பழி சுமத்தி, இந்த அநியாயமான தண்டனைக்கு என்னை ஆளாக்கினார்கள்,' என்றான்.

இரண்டாம் குற்றவாளி, 'அரசே, நியாயாதிபதி என்னை வேறொருவன் என்று எண்ணிக்கொண்டு, அவன் செய்த குற்றத்திற்காக என்னைத் தண்டித்துவிட்டார். உண்மையில் நான் யாதொரு குற்றமும் செய்தறியேன்,' என்று முறையிட்டான்.



மூன்றாம் குற்றவாளி, 'பெருமானே, எனக்குத் தண்டனை விதித்தது முற்றிலும் அநியாயம். குற்றம் என்பதை நான் கனவிலும் நினைத்ததில்லை. நியாயாதி-

பதிக்கு என்மேல் நெடுங்காலமாக விரோதம் உண்டு. அதைப் பாராட்டி அவர் எனக்குத் தண்டனை விதித்து விட்டார்,' என்று கூறினான்.

நான்காம் குற்றவாளி, 'ஆண்டவரே, ஏழைமீது இரக்கங்கொண்டு நான் சொல்வதைச் சிறிது செவி-சாய்த்துக் கேட்கவேண்டும். நான் என்றும் எவ்விதக் குற்றமும் புரிந்ததில்லை. துஷ்டரைக் கண்டால் தூர விலகிவிடுவேன். நியாயாதிபதி என்னைப் பலர் கூடிய சபையில் நிறுத்தி அதிக கோபத்துடன் கேள்விகள் கேட்டார். நான் பயந்து, நாக்குக் குழறி, ஒன்றுக்கு ஒன்றாகப் பிதற்றிவிட்டேன். என் தடுமாற்றத்தைக் கண்டு அவர் என்னைக் குற்றவாளி என்று தீர்மானித்து, சிக்ஷை விதித்துவிட்டார்' என்று உரைத்தான்.

ஐந்தாம் குற்றவாளி மாத்திரம் தலை குனிந்து ஒன்-றும் பேசாமல் இருந்தான். அவனைப் பார்த்து, அரசன், 'அப்பா, நீ ஏன் ஒன்றும் பேசாமல் சும்மா இருக்கி-றாய்? உன் வரலாற்றையும் சொல்' என்று கேட்டான்.

அதற்கு அவன், 'ஐயனே, நான், சமுகத்துக்கு என் குற்றத்தை என்னென்று எடுத்துக் கூறுவேன்! நான் எனது வறுமை காரணமாக அண்டை வீட்டுக்-காரனுடைய பொருளை அபகரிக்கத் திருடினேன். அதனால் எனக்கு இக் கதி நேர்ந்தது' என்று கூறினான்.

அதைக் கேட்ட அரசன், 'அப்படியா, சரி, நீ பரம துஷ்டன்; இந்த நால்வரும் பரம யோக்கியர்கள்; இந்த யோக்கியர்களோடு அயோக்கியனாகிய நீ கூடி யிருப்பது சரியன்று; இனி இங்கு நில்லாதே, தக்ஷ-ணமே வெளியே போய்விடு,' என்று விரைந்து கூறி-னான். பிறகு, சிறைச்சாலை அதிகாரியை அழைத்து,

ஐந்தாம் குற்றவாளியின் காலில் பூட்டியிருந்த விலங்-கைக் கழற்றி, அனுப்பிவிடும்படி உத்தரவு செய்தான்.

பிறகு, மன்னன் மற்ற நால்வரையும் பார்த்து, 'மூடர்களே, நீங்கள் குற்றம் செய்ததுமன்றி, அதை மறைக்கப் பொய்யும் பேசினீர்கள். குற்றம் செய்தவன் அதை மறைக்கப் பொய் உரைப்பானானால் அது மற்-றொரு குற்றமாகச் சேர்கிறது. உங்களோடு இருந்த-வன் உண்மை பேசியதனால் அவன் தான் செய்த குற்-றத்துக்காக வருந்துகிறான் என்பதும், அதனால் அவன் இனிக் குற்றமொன்றும் செய்யமாட்டான் என்பதும் ஏற்பட்டன. நீங்கள் பொய் உரைத்ததனால் குற்றத்தி-லேயே நாட்டங்கொண்டிருக்கிறீர்கள் என்பது வெளி-யாகிறது. ஆகையால், நீங்கள் இந்தத் தண்டனையோடு மற்றொரு வருஷமும் சிறையி லிருக்கவேண்டும்' என்று சொன்னான். பொய் சொன்ன குற்றவாளிகள், 'குற்-றத்தை ஒப்புக்கொண்டிருந்தால் குணமடைந்து இருக்க லாமே' என்று வருந்தினார்கள்.



## 21. பொறிகளும் புலன்களும்

'எண் ஜாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்' என்னும் உறுதியுரை உலகில் வழங்குகிறது. இதற்குக் காரணம் என்ன? அறிவுக்கு முக்கிய ஸ்தானம் மூளை. அந்த மூளை தலைக்குள்ளே அமைந்திருக்கின்றது. அதுவு-மன்றி கண், காது, வாய், மூக்கு ஆகிய முக்கியமான உறுப்புக்களும் தலையில் அமைந்திருக்கின்றன. ஆகை-யால் உடம்பில் தலையே சிறந்த உறுப்பாக விளங்கு-கின்றது.

நாம் அரோக திடகாத்திரராக இருக்கும்போது நம்முடைய காரியங்களைச் செய்வதற்கு ஐந்து உறுப்புக்கள் அமைந்திருக்கின்றன. அவை, மெய் வாய் கண் மூக்கு செவி என்பனவாம். இந்த ஐந்திற்கும் ஐம்பொறிகள் என்று பெயர். இந்த ஐம்பொறிகள் செய்யும் காரியங்களுக்கு ஐம்புலன்கள் என்று பெயர். இனி ஐம்பொறிகளைப்பற்றியும் ஐம்புலன்களைப் பற்றியும் இங்கே ஆராய்வோம்:

## 1. மெய்

மெய் என்பது உடல்; இது உச்சி முதல் உள்ளங்கால்வரையிலுள்ள பூரண ரூபத்தைக் குறிக்கும். மெய்யின் தொழில் பரிச உணர்ச்சியாகும். இதற்குத் தொட்டறிதல் என்பது பொருள். மற்ற அறிவுகளைவிட இந்தப் பரிசவுணர்ச்சியே சிறந்தது. ஏனெனின், இது தேகமெங்கும் பரவியிருக்கும் உணர்ச்சியாகும். கண் மூடிக்கொண்டிருந்தாலும், காது கேளாமலிருந்தாலும், மூக்கு முகராதிருந்தாலும், வாய் சுவைக்காமலிருந்தாலும் தேகம் மாத்திரம் பரிசவுணர்ச்சியாகிய தன் தொழிலைச் சதா செய்துகொண்டேயிருக்கிறது. எல்லாவற்றையும் மறந்து நித்திரை செய்கையில் ஒரு சிறு எறும்பு நம் உடலில் ஏறினாலும் அதைப் பரிசவுணர்ச்சியாகிய அறிவு உடனே நமக்குத் தெரிவித்துவிடுகிறது. ஆகையால், பரிச உணர்ச்சி மிகச் சிறந்ததாகும்.

## 2. வாய்

வாய் சுவையை அறிவதற்குக் கருவியாயுள்ள உறுப்பு. இது முகத்தில் மூக்கிற்கும் மோவாய்க்கட்டைக்கும் இடையே குறுக்கில் அமைந்திருக்கிறது. வாய்க்கு வாயிற் கதவுகளாக மேலுதடும் கீழுதடும்

அமைந்து இருக்கின்றன. வாய்க்குள் மேல்வாயின் ஓரத்தில் ஒரு வரிசைப் பற்களும், கீழ்வாயின் ஓரத்தில் ஒரு வரிசைப் பற்களும் ஒரு நாக்கும் இருக்கின்றன. இவை அனைத்தும் சேர்ந்து, உணவைத் தின்பதற்கும், சுவையை அறிவதற்கும், பேசுவதற்கும், சில சமயங்களில் மூக்கிற்குப் பதிலாகச் சுவாசிப்பதற்கும் உதவுகின்றன.

மேல்வாய் மண்டையோட்டோடு சேர்ந்து அசையாமல் இருக்கிறது. கீழ்வாய்மட்டும் காதண்டையிருக்கும் ஒரு தாளின் அநுகூலத்தால் மேலும் கீழும் அசையக்கூடியதாக அமைந்து இருக்கிறது. தலைக்கூட்டில் இருக்கும் எலும்புகளில் கீழ்வாய் எலும்பு ஒன்றே அசையக்கூடியது.

பற்கள், உதடுகள் — ஒரு மனிதனுக்கு மேல்வாயில் பதினாறும், கீழ்வாயில் பதினாறும் ஆக முப்பத்திரண்டு பற்கள் உண்டு. பற்கள் ஈறுக்குள் ஆழ்ந்து செல்கின்றன. ஆழ்ந்து செல்லும் அந்தப் பாகத்திற்குப் பல்வேர் என்று பெயர். மரத்தின் வேரும் நமது கண்ணுக்குத் தெரியாமல் பூமிக்குள் செல்வது உனக்குத் தெரியும் அல்லவா? வாயிலுள்ள பற்களைக் கவனித்துப் பார். முன்பற்கள் தட்டையாகவும் முனை கருக்காகவும் இருக்கின்றன. எதையாவது கடிக்கவேண்டுமானால் முன்பற்களால் கடிக்கிறோம். அதனால் இந்த முன்பற்களுக்குக் கடிக்கும் பற்கள் என்று பெயர். கடைவாய்ப் பற்கள் அகன்று பருத்து இருக்கின்றன. அவை எதையும் மெல்ல உதவுகின்றன. அதனால் அவைகளுக்கு அரைக்கும் பற்கள் என்று பெயர். முன்பற்களுக்கும் கடைவாய்ப் பற்களுக்கும் இடையே

இரு புறங்களிலும், முனை கூரான ஒரு பல் இருக்கிறது. எதையாவது பிய்ப்பதற்கு அந்தப் பல் உபயோகப்படுகிறது. அதனால், அதற்குப் பிய்க்கும் பல் என்று பெயர். இது மாமிச பக்ஷணிகளான மிருகங்களுக்கு இருக்கும் கோரைப் பல்லுக்குச் சமமானது. பற்கள் மெல்லுகிற பண்டங்கள் கீழே விழாதபடி தடுப்பதற்கு உதடுகள் உதவும்.

நாக்கு — நாக்கு தசையினாலானது. இது அடியில் அகன்று முனையில் குவிந்து அரை வட்டமாக அமைந்திருக்கிறது. அடிநாக்கு கீழ்வாயில் தொண்டையண்டை ஒட்டிக்கொண்டு இருக்கிறது. நாம் நாக்கை வாய்க்கு வெளியே நீட்டவும் உள்ளே சுருக்கவும் கூடும். நாக்கே சுவையை அறிவதற்கான முக்கிய அவயவம். பண்டங்களைப் பற்கள் மெல்லும்போது, அவை நழுவிப் போகாமல், நாக்கு அவற்றை அப்பற்களின் புறமாகத் தள்ளிக் கொடுத்துக்கொண்டேயிருக்கும். பல், உதடு, அண்ணம், கீழ்வாய், மூக்கு முதலிய உறுப்புக்களின் உதவியால் நாக்கு பேசும் உறுப்பாக ஏற்பட்டிருக்கிறது.

## 3. கண்

கண் என்பது பார்வைக்குரிய உறுப்பு. கண் தன்னைச் சுற்றியுள்ள எல்லாவற்றையும் நன்றாய்ப் பார்க்கும்; ஆனால் தன்னைத் தான் பார்த்துக்கொள்ள முடியாது. கண்ணில் சுற்றிலும் வெள்ளை விழியும் நடுவில் கருவிழியும் அமைந்திருக்கின்றன. கருவிழியைக் கவனித்துப் பார். அதில் ஓர் உருவம் தோன்றும். அதற்குப் பாவை என்று பெயர். இந்தப் பாவை யில்லாவிட்டால் நேத்திரம் பழுது பட்டதாகும். 'கண்ணிற்

சிறக்க உறுப்பில்லை.' ஆதலால், அதைக் காப்பாற்றக் கடவுள் ஏற்படுத்தி யிருக்கும் அமைப்பைக் கவனிப் போம்.

கண்வளை — கண் க்ஷேமமாக அமைந்திருப்ப-தற்கு ஏற்பட்டிருக்கும் எலும்புக் கூட்டிற்குக் கண்வளை என்று பெயர். மேற்புறத்தில் புருவ எலும்பும், கீழ்ப் புறத்திலும் காதின் புறத்திலும் கன்ன எலும்பும், மூக்-கின் புறத்தில் மூக்கெலும்பும் சூழ்ந்து கண்வளையாக அமைந்திருக்கின்றன. இந்தக் கண்வளையின் உள்ளீ-டாகச் சுற்றிலும் அதிக மிருதுவான கொழுப்படை பொருந்தி யிருக்கிறது. அதனால் கண்விழி மேலும் கீழும் பக்கங்களிலும் சுலபமாகச் சுழல்கின்றது.

இமைகள் — கண்ணுக்கு மேலும் கீழும் அமைந் திருக்கும் மூடிக்கு இமைகள் என்று பெயர். இவற்-றுள் மேலிமை பெரியது, கீழிமை சிறியது. மேலிமை அசையுந் தன்மையுள்ளது, கீழிமை நிலைத்திருக்கும் தன்மையுள்ளது. கண்ணில் ஏதேனும் தூசு விழும்-போதும், தூங்கும்போதும் இமைகள் விழிகளை மூடிக்-கொண்டு பாதுகாக்கின்றன. இமையின் ஓரத்திலுள்ள மயிருக்குக் கண்மயிர் என்று பெயர். இந்தக் கண்மயிர் மிகவும் நுட்பமான அணுக்களும் கண்ணில் விழாதபடி தடுத்துவிடுகின்றது; அதிக வெளிச்சம் கண்ணிற் பாயா-மல் இருக்கும்படி காக்கிறது.

கண்ணீர் — கண்ணைச் சுற்றிலும் நீர்க்கால் உண்டு; கண் வரண்டு போகாமல் அந்த நீர் அதைக் காப்பாற்றுகிறது. அழும்போதும், அதிக ஆநந்தம் கொள்ளும்போதும் கண்ணில் தண்ணீர் வருவது உனக்குத் தெரியுமல்லவா?

புருவம் — புருவம் என்பது கண்ணுக்கு மேலே வில்வளைவாக மயிர் அடர்ந்திருக்கும் பாகம். அது, நெற்றியில் உண்டாகும் வியர்வை கண்ணில் விழாதபடி தடுத்து, கண்ணைக் காக்கின்றது.

## 4. மூக்கு

மூக்கு புருவ மத்தியில் ஆரம்பித்து வாய்க்கு நேர்மேல் முடிகிறது. சுவாசிப்பதும் வாசனை யறிவதும் மூக்கின் தொழில்களாம். மூக்கை நன்றாய் அழுத்திப் பார். இரண்டு கண்களுக்கும் இடையிலுள்ள பாகம் கடினமாகவும், அதற்குக் கீழுள்ள பாகம் மிருதுவாகவும் இருக்கின்றன. மூக்கின் இடையில் ஒரு தண்டு நின்று மூக்குத்தொளைகள் இரண்டாகப் பிரியும்படி செய்கின்றது. மூக்கின் மேற்பாகம் எலும்பினாலும் கீழ்ப்பாகம் முருந்தினாலும் இயன்றிருக்கிறது. முருந்து என்பது எலும்பு மல்லாமல் தசையு மல்லாமல் கடுத்தமாயுள்ள ஒருவகைக் குருத்து எலும்பாம். இது மடக்கினால் கொஞ்சம் துவண்டு வளைந்து, விட்டுவிட்டால் முன்னிருந்த நிலையை அடையுந் தன்மையுடையது. மூக்குத் தொளை, முன்பு இரண்டாக ஆரம்பித்து, நெடுகச் சென்று, மேல்வாயில் ஒன்றாக முடிந்து, குரல்வளையோடு சம்பந்தப்படுகிறது. மூக்கினால் வாயுவைச் சுவாசித்து எல்லா உயிர்களும் ஜீவிக்கின்றன. மூக்கு வாய்க்கு நேர்மேலிருப்பதனால் அதிக நன்மையுண்டு. நாம் உணவுப் பொருளை வாயண்டை கொண்டுவரும் போது, மூக்கு வாய்க்குமேலே இருந்து வாசனை யறிந்து, இது நல்லது, இது கெட்டது என்று தெரிவிக்கிறது. இது பெரும்பயன் அல்லவா?

## 5. செவி

செவி என்பது பக்கத்துக்கு ஒன்றாகக் கன்னக் கோடியில் இருக்கும் உறுப்பாம். இது ஓசையைக் கேட்டறிவதற்கு உபயோகமாகிறது. கண்ணால் பார்த்துத் தெரிந்துகொள்ளக் கூடாத அநேக விஷயங்களைக் காதால் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். 'யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே' என்னும் பழமொழியைக் கவனித்துப் பார். யானை பின்னே வருகிறதைக் கண் பார்த்துத் தெரிந்துகொள்வதற்கு முன்னே, அதன் மணியோசையைக் காது கேட்டுத் தெரிந்துகொண்டு யானை வருவதை உணர்த்துகிறது. காது இல்லாவிட்டால் ஒருவர் பேசுவது மற்றொருவருக்குத் தெரியுமா? செவிடருக்குச் சங்கீதத்தினால் பயனுண்டா? குருடனும் செவிடனும் கூடிக் கூத்துப் பார்க்கப் போனார்கள். கூத்து முடிந்ததும் குருடன் பாட்டு நன்றாயிருந்தது என்றான்; செவிடன் கூத்து நன்றாயிருந்தது என்றான். அவர்கள், ஏன் அப்படிச் சொன்னார்கள்? இந்தச் சங்கதியை நீயே தெரிந்து சொல்.



# 22. பூ காய் பழம்

நாம் ஒரு பூந்தோட்டத்தில் சென்றால் பலவகை மலர்களைப் பார்க்கின்றோம். ஒவ்வொரு வகைக்கும் வெவ்வேறான நிறமும் வெவ்வேறான மணமும் அமைந்திருக்கின்றன. மலரின் நிறங்கள் நேத்திரானந்தமாக விளங்குகின்றன. மலரின் மணமோ மனோகரமாக இருக்கிறது. மலர்களால் நமக்கு உண்டாகும் பயன் என்ன?

மலர்கள் மனிதருக்குப் பல வகையில் பயன்படு-கின்றன. சுபம் அசுபம் ஆகிய இரண்டு காரியங்களுக்-கும் மலர்கள் இன்றியமையாதவை. மாணிடர் அலங்காரமாக மலர்களைச் சூட்டிக் கொள்ளுகின்றார்கள். அவை, வாசனைத் திரவியங்கள் செய்ய உபயோகமாகின்றன. சில வகை நோய்களை மலர்கள் பரிகரிக்கின்றன.




இதோ இந்த மலரைக் கவனித்துப் பார். இந்த மலரின் அடிப் பாகத்தை, காம்போடு சேர்ந்த கவசம் ஒன்று பற்றிக்கொண்டு இருக்கிறது. இந்தக் கவசம் இலையைப் போலவே பசுமை நிறமாக இருக்கிறது. இதற்குப் புஷ்ப கோசம் என்று பெயர். இந்தப் புஷ்பகோசம் நுனியில் சிறு இதழ்களாக விரிந்திருக்கின்றது. அவற்றிற்குப் புல்லி அல்லது புறவிதழ் என்று பெயர். இந்தப் புஷ்ப கோசத்தின் அடியிலிருந்து பூவிதழ்கள் நீண்டு சென்று நுனியில் மலர்கின்றன. இந்த இதழ்களுக்கு அல்லி அல்லது அகவிதழ் என்று பெயர். இந்த அக-

1. புஷ்பகோசம்.
2. புஷ்பகோசத்தின் இதழ்கள். புல்லி அல்லது புறவிதழ்.
3. அகவிதழ்களின் அடி.
4. அல்லி அல்லது அகவிதழ்.
5. புருஷ நாளங்கள்.
6. ஸ்திரீ நாளம்.
7. கருப்பாசயம்.
8. கிலம்.
9. கிலாக்கிரம்.

விதைப்பைக்கு இடையே சில நாளங்கள் இருக்கின்றன, அவற்றைக் கவனித்துப் பார். இவற்றுள் ஒன்று நடுவில் இருக்க, சில அதைச் சுற்றிச் சூழ்ந்திருக்கின்றன. நடுவிலிருப்பது ஸ்த்ரீ நாளம்; அதைச் சூழ்ந்திருப்பவை புருஷ நாளங்கள்.

புருஷ நாளம் ஒவ்வொன்றின் உச்சியிலும் ஒரு பை இருக்கிறது. அந்தப் பையில் மகரந்தம் என்னும் அணுக்கள் நிறைந்திருக்கின்றன. அந்த மகரந்தம் ஸ்த்ரீ நாளத்தின் உச்சியில் விழுந்தால், அது அடியில் சென்று கருவாகிக் காயாகிறது. இதுவே காய் உண்டாவதற்குக் காரணம். அதை விவரித்துக் கூறுகிறேன் கேள்:

இதோ இந்த ஸ்த்ரீ நாளத்தைப் பார். இதற்கு நுனி இடை அடி ஆகிய மூன்று பாகங்கள் இருக்கின்றன. நுனிப் பாகத்திற்குக் கேசாக்ரம் என்றும், இடைப் பாகத்திற்கு நாளம் என்றும், அடிப் பாகத்திற்குக் கர்ப்ப கோசம் என்றும் பெயர். கேசாக்ரம் பிசின்போன்ற ஒருவகைப் பசையைக் கொண்டிருக்கிறது. புருஷ நாளத்திலுள்ள மகரந்தங்களில் ஒன்று கேசாக்ரத்தில் விழுந்தவுடனே, கேசாக்ரத்தின் வாய் மூடிக்கொள்ளும்; விழுந்த மகரந்தப்பொடி அதிவிரைவாகச் சென்று கர்ப்ப கோசத்தை அடையும். பிறகு அந்தக் கர்ப்ப கோசம் கருக்கொண்டு, காய்க்க ஆரம்பிக்கும்.

இனி மகரந்தப் பொடி கேசாக்ரத்தில் விழும் விதத்தைக் கூறுவோம். புருஷ நாளத்தின் உச்சியிலுள்ள பை வெடித்து மகரந்தம் பொடிப் பொடியாக உதிரும். அப்போது கேசாக்ரம் ஓர் அணுவைத் தன் வசமாகக் கிரகித்துக்கொள்ளும். சில சமயங்களில்

இன்றென் செய்வது நாளையென் செய்வதிங்
கென்றே வருந்தும் இயல்பெனக் கில்லையே
செல்வச் சிறுவ இவ்விதச் செல்வம்
நல்லமெய்ஞ் ஞானியர் நாடினும் கிடைத்தல்
அருமையே யென்ன அறிவுள மாந்தர்
பெருமையா யுமக்குட் பேசுவ தில்லையோ
யானிங் கதனை யறிய
ஊன மின்றி உரைத்திடு வாயே.



## 24. காகம் பாம்பைக் கொன்றது

கோடுறு சினையில் காகம்
கூடுவைத் தனேக காலம்
பேடொடு கூடி வாழும்
பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கருப்பாம் பொன்றங்
கதுபெறும் முட்டை யெல்லாம்
நாடியே குடித்துப் போட
நலிந்துளம் மெலிந்து வாடி
தன்னுயிர்ப் பாங்க னான
சம்புகன் அருகு போயிங்
கென்னசெய் குவனென் என்ன
இதைக்கொலல் அரிதோ நீபோய்
மன்னவன் தேவி ஆடும்
மஞ்சனச் சாலை புக்குப்
பொன்அணி கொண்டு வந்து
போடுக பொந்தில் என்ன

8. தேனே யமுதமே செல்வக் கிளியே
கோனே யென்னைக் குலவிழுத் தாடினை

9. புன்சொல் கேட்டே புந்தி மகிழ்ந்தனை
இன்சொல் இதனினும் எங்குண் டென்றனை

10. தளர்நடை கண்டாய் தழைத்த மனத்தில்
கிளர்ச்சியே கொண்டாய் கேடில்சீர் அன்னாய்

11. நான்நோய் கொண்டேன் நைந்தனை நீயே
அவைபல் மருந்தும் அருந்தினை யென்னே

12. குற்றம் பலவும் குணமாக் கொண்டனை
மற்றவும் என்னால் வழுத்தவும் படுமோ

13. அன்னாய் உன்றன் அன்பினை யுன்னில்
என்னென் றுரைப்பேன் என்னென் றுரைப்பேன்



## 26. மானிட வாழ்க்கை

1. பெற்றோர்க ளீட்டிய பெரும்பொரு ளைக்கொண்டு
பெருமையாய் வாழ்ந்திட்ட பேதை யொருவன்

2. தேடா தழித்திடில் பாடாக முடியுமெனுஞ்
சிரிய வார்த்தையும் தேர்ந்தி டாமல்

3. இப்பொரு ளென்றுமே மெய்ப்பொரு ளாகுமென்
றிருந்தனன் ஓர்தொழிலும் இல்லனாக

4. வளவனே யாயினும் அளவறிந் துண்கவெனும்
மன்னுமேன் மொழியையும் மனத்தி லின்றன்

5. ஆனதோர் முதலினும் அதிகமே செலவாக்கி
ஆயினான் வறுமைநோய்க் காளனாக

6. சிறுமையால் பேணியும் வாடியே வனப்பற்று
வஞ்சகம் பொய்முதல் மருவி னானே

7. இல்லானை யெல்லாரும் எள்ளுவ ரென்பபோல்
இல்லாளும் வேண்டிடா திகழ்வ தானாள்

8. மக்களோர் புறமும் மனைவியோர் புறமு
மாருதப் பஞ்சென்ன மனமு லைந்து

9. நாட்டினில் வாழ்க்கையை நஞ்செனக் கொண்டனன்
காட்டினில் வாழ்க்கையைக் கருதி னானே

10. ஐங்காதம் ஏகினுந் தன்பாவம் தன்னுடன்
ஆகுமாம் என்பதை அறிந்தி லானே

11. கானகத் துற்றனன் கரந்தனன் ஒருபுறங்
களிறொன்று தொடர்ந்ததே கடுஞ்சி னத்தால்

12. ஓடினன் வழியினில் உற்றதோர் கேணியில்
உணர்வின்றி வீழ்ந்தனன் உடல் நடுங்கி

13. தரையினில் சேர்ந்திடக் கருதினா னங்கொரு
கருநாக முஞ்சீறிக் கடுகி வரலும்

14. என்செய்வேன் என்செய்வேன் என்விதிக் கென்னவே
ஏங்கிமேல் நோக்கினான் இன்ப முற்றான்

15. கேணியின் நடுவினில் கிளையொன்று நான்றிடக்
கிளர்ச்சியால் தாவினான் கிட்டி யதனை

16. பற்றியே நான்றுதன் பயமகன் றனனதப்
பற்களால் ஓரெலி படப டெனவே

17. கடித்திடல் நோக்கினான் கலங்கினான் மலங்கினான்
சதியிதோ டிறுதியாக் கருதி னானே

18. பட்டதோர் காலிலே பட்டிடு மாறுபோல்
கெட்டதோர் குடியதே கெட்டு வருமே

19\. சென்றதை யுன்னியே சிந்தையும் நொந்தனன்
சென்றிடுங் காலமே சேர்ந்த தென்று

20\. அங்காந்த வாயுடன் ஆகாயம் நோக்கினன்
அம்மரத் தூச்சியில் அமைந்த கூட்டில்

21\. தெளிவோர் துளிவிழச் சிந்தையிற் களிகொண்டு
தீர்ந்தனன் துக்கமு மற்ற றிவினால்

22\. மாமுகிலு தன்னவன் வாயினில் வீழ்ந்துபின்
மாண்டனன் அன்புள்ள மக்க ளேநீர்

23\. யாவிடப் பிறவியில் மன்னும் இன்பங்களும்
ஆனதுன் பங்களும் அறிய லாமே.

ஔவையார் அருளிச்செய்த

## 27. வாக்குண்டாம்

1\. நன்றி யொருவற்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா — நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தரு லால். (1)

2\. நல்லா ரொருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே — அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மே லெழுத்திற்கு நேர். (2)

3\. அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (3)

4\. அடுத்து முயன்றாலும் ஆகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா — தொடுத்த
உருவத்தால் நீண்ட வுயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா. (4)

5. உற்ற விடத்தில் உயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ — கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான். (5)

6. நீரளவே யாகுமா நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமா நுண்ணறிவு — மேலைத்
தவத்தளவே யாகுமாந் தாம்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகும் குணம். (6)

7. நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே — நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று. (7)

8. தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே — தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது. (8)

9. நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம் — தொல்லுலகில்
நல்லா ரொருவர் உளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை (9)

10. பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம் — கொண்டபே
ராற்ற லுடையார்க்கு மாகா தளவின்றி
வற்ற கருமஞ் செயல். (10)

11. மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா — கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும். (11)

12. கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் — சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம். (12)

13. கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத் — தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. (13)

14. வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல் — பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மே லிட்ட கலம். (14)

15. அடக்க முடையார் அறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா — மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு. (15)

16. அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர் — அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு. (16)

17. சீரியர் கெட்டாலும் சீரியரே சீரியர்மற்
றல்லாதார் செட்டாலங் கென்னாகும் — சீரிய
பொன்னின் குடமுடைந்தால் பொனாகும் என்னா
மண்ணின் குடமுடைந்தக் கால். [கும்

18. நற்றா மரைக்கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர் — கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம். (18)

19. மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன் — மன்னற்குத்
தன்தேச மல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு. (19)

20. சாந்தனையும் தீயனவே செய்திடினுந் தாமவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர் — மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம். (20)



ஔவையார் அருளிச்செய்த

## 28. நல்வழி

1. சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின் — மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி. (21)

2. ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கால் உலகூட்டும் — ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராணாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. (22)

3. ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர் — வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும். (23)

4. ஒருநாள் உணவை யொழியென்றால் ஒழியாய்
இருநாளுக் கேலென்றால் ஏலாய் — ஒருநாளும்
என்னோ வறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்த லரிது. (24)

5. பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் — கூடுவிட்டே
ஆவிதான் போனபின் பாரே யனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம். (25)

6. ஆன முதலில் அதிகம் செலவானால்
மான மழிந்து மதிகெட்டுப் — போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லானாம் நாடு. (26)

7. ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும் — ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல். (27)



## 29. நீதிவெண்பா

1. தாமரை பொன்முத்து சாமரைகோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா — தாமழன்மற்
றெங்கே பிறந்தாலும் எள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என். (28)

2. பகைசேரும் எண்ணான்கு பற்கொண்டே நன்னா
வகைசேர் சுவையருந்து மாபோல்—தொகைசேர்
பகைவரிடம் மெய்யன்பு பாவித் தவரால்
சுகமுறுதல் நல்லோர் தொழில். (29)

3. ஈக்கு விடந்தலையில் எய்தும் இருந் தேளுக்கு
வாய்த்த விடம்கொடுக்கில் வாழுமே — நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனருக்
கங்கமுழு துப்விடமே யாம். (30)

4. கொப்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. (31)

5. கற்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்
கற்பூர மாமோ கடலுப்பு — பொற்பூரும்
புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியரா வாரோ புகல். (32)



## ஸி. குமாரஸாமி நாயுடு ஸன்ஸ்

### மேரி ராணி வாசக புஸ்தகங்கள்

முதல் வகுப்பு ... ... ... 0
இரண்டாம் வகுப்பு ... ... ... 0
மூன்றாம் வகுப்பு ... ... ... 0
நான்காம் வகுப்பு ... ... ... 0
ஐந்தாம் வகுப்பு ... ... ... 0

### சொற்றொடர் ஆக்கம்

முதல் புத்தகம் ... ... ... 0
இரண்டாம் புத்தகம் ... ... ... 0
மூன்றாம் புத்தகம் ... ... ... 0

### [illegible]கணங்கள்

சிற்றிலக்கண வினாவிடை I-4-ஆம் வகுப்பு ... 0
சிற்றிலக்கணம்—II -முதல் பாரத்திற்கு ... 0
சிற்றிலக்கணம்—III-இரண்டாம் பாரத்திற்கு 0
சிற்றிலக்கணம்—IV -மூன்றாம் பாரத்திற்கு ... 0

### மூன்றாம் வகுப்புப் பூகோளங்கள்

சென்னபட்டணம் ஜில்லா ... ... 0
செங்கற்பட்டு ஜில்லா ... ... ... 0
தென் ஆற்காடு ஜில்லா ... ... 0
கோயமுத்தூர் ஜில்லா ... ... ... 0
தஞ்சாவூர் ஜில்லா ... ... ... 0
மதுரை ஜில்லா ... ... ... 0
இராமநாதபுரம் ஜில்லா ... ... 0
திருநெல்வேலி ஜில்லா ... ... ... 0
சேலம் ஜில்லா ... ... ... 0
வட ஆற்காடு ஜில்லா ... ... ... 0

---

Caxton Press, Madras